# மதங்களின் ஒற்றுமை



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# மதங்களின் ஒற்றுமை


அருளியது :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

திரு. G. சத்தியகிரிராஜன், M. A., B. T.


சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு





தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

விலை ] 1985 [ ரூ. 5—00

* o *

Translation of :

# "UNITY OF RELIGIONS"

## In Tamil

* o *

*Printed out of the magnanimous donation of :*

Devotees and Disciples of

H. H. SRI SWAMI SIVANANDAJI MAHARAJ

Printed at The Literary Press, Salem - 636 001.

## ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனல் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புக்கள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டுக்கான ஞானயக்ஞத் தொடரில் 'மதங்களின் ஒற்றுமை' என்ற நூலை திரு. G. சத்தியகிரிராஜன், M. A., B. T. அவர்கள் மிக அற்புதமாக தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda

ॐ

# பொருளடக்கம்

## அத்தியாயம் — 3.

### சமய இணக்கம் பற்றிய கவிதைகள்

## அத்தியாயம் — 4.

### சமய ஒப்பீடு



## அத்தியாயம் — 5.

### அனைத்துலக மதங்களின் சம்மேளனம்

# "மதங்களின் ஒற்றுமை"

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

---

| நெ. | பெயரும் விலாசமும் | ரூபாய் |
|---|---|---|
| 1. | 'ஞானதான வள்ளல்'<br>திரு. S. கோவிந்தசாமி முதலியார் &<br>திருமதி தனலட்சுமி அம்மாள், ஈரோடு-1. ... | 202 |
| 2. | திரு. G. நடராஜன்,<br>'வீரம்மாள் பேக்கரி' சென்னை-21. ... | 100 |
| 3. | திரு. S. கிருஷ்ணமூர்த்தி,<br>செயலாளர், கம்பன் கழகம், இராசிபுரம். ... | 101 |
| 4. | "சிவானந்தா டெக்ஸ்டைல்ஸ்"<br>இராசிபுரம், சேலம் Dt. ... | 70 |
| 5. | திரு. T. V. A. நடேசன் செட்டியார்,<br>ஷராப் வியாபாரம், திருச்செங்கோடு. ... | 70 |
| 6. | திரு. R. ராகவன்,<br>The Federal Bank Ltd., தஞ்சாவூர். ... | 70 |
| 7. | ஸ்ரீ மகா கோவிந்த சுவாமிகள்,<br>ஸ்ரீ ஜகத்குரு ஆஸ்ரமம்,<br>கொப்பமாபுரி-621 012. ... | 70 |
| 8. | முத்தமிழ்ப்பண்ணை அரங்கராசன்,<br>வைரிசெட்டிபாளையம்-621 012. ... | 70 |
| 9. | திரு. D. ராமலிங்கம்,<br>16/6, லிங்கப்ப செட்டி வீதி, கோவை-1. ... | 71 |

10. திருமதி V. சரஸ்வதி, 'சிவானந்த நிலயம்'
ஜெயமஹால் எக்ஸ்டென்ஷன்,
பெங்களூர்–46 ... 70

11. திருமதி விசாலாட்சி அம்மையார்,
இராசிபுரம். ... 70

12. திரு. N. வெங்கட்ராமன்,
9/1, நடராஜ நிலயம்,
மல்லேஸ்வரம், பெங்களூர்-3. ... 70

13. திரு. A. சுப்பரமணியம்,
'இயற்கை வைத்தியம்' & மிதியடி கடை,
இராசிபுரம். ... 70

14. திரு. T. N. கோபால் செட்டியார் சன்
ஜவுளி வியாபாரம், இராசிபுரம். ... 70

15. திரு. K. S. வேலாயுதம், 'பில் கலெக்டர்'
நகர பஞ்சாயத்து,
ஜாரிகொண்டலாம்பட்டி, சேலம்-10. ... 70

16. திரு. A. K. சித்தர்,
விறகு டிப்போ, திண்டுக்கல்-1. ... 70

17. திரு. D. K. N. சந்திரசேகரன்,
'சந்தர் டெக்ஸ்டைல்ஸ்' சேலம்-6. ... 70

18. திரு. S, சுகுமார்,
''பொன்தாய் பேப்ரிக்ஸ்'', சேலம்-6. ... 75

19. K. A. மல்லைய்ய செட்டியார் & சன்ஸ்,
கலர் நூல் வியாபாரம், சேலம்-6. ... 70

20. திரு. V. E. நடராஜன்,
S/o. ஸ்ரீ ஈஸ்வர ஐயர், வேலூர், சேலம் Dt. ... 75

| | | | |
|---|---|---|---|
| 21. | திரு. S. கோபாலகிருஷ்ணன் &<br>திருமதி சரஸ்வதி அம்மாள், இராசிபுரம். | ... | 70 |
| 22. | திரு. V. மாரப்பகவுண்டர், 'N. R. T.'<br>லக்ஷ்மி இல்லம், நாமக்கல். | ... | 70 |
| 23. | திரு. N. P. இராமசாமி & பிரதர்,<br>காமாட்சி ரைஸ் மில், நாமக்கல். | ... | 70 |
| 24. | திரு. ம. அய்யா நாடார்,<br>'மீனாக்ஷி பவனம்'<br>தேனி, மதுரை மாவட்டம். | ... | 70 |
| 25. | திரு. SM. RM. அடைக்கலவன் செட்டியார்,<br>'லக்ஷ்மி பார்மஸி', இர்ாசிபுரம். | ... | 70 |
| 26. | திரு. M. A. M. சுப்பு அவர்கள் ஸ்ரீ லெக்ஷ்மி<br>மெடிக்கல்ஸ் குருப்ஸ், சேலம்-1. | ... | 70 |
| 27. | திரு. R. V. P. சாரதி<br>வில்லிவாக்கம், சென்னை-49. | ... | 70 |
| 28. | திரு. M. பெரியசாமி,<br>S. M. P. M. டெக்ஸ்டைல்ஸ்,<br>சீராப்பள்ளி, சேலம் Dt. | ... | 70 |
| 29. | திருமதி V. கனகம்மாள், இராசிபுரம். | ... | 70 |
| 30. | திரு. A. விட்டல்நாதன்,<br>'ஸ்ரீ சக்தி ஏஜன்சீஸ்' கோவை-9. | ... | 70 |
| 31. | திருமதி காயத்ரி சுப்ரமணியம்,<br>சென்னை-17. | ... | 70 |
| 32. | திரு. C. சிவராமகிருஷ்ணன், மதுரை-1. | ... | 70 |
| 33. | திரு. மா. இராஜரத்தினம், B. A., B. T.<br>சிவம் யோகாசன சாலை, சேலம்-7. | ... | 70 |

| | | | |
|---|---|---|---|
| 34. | திரு. P. R. ராம்தாஸ், மதுரை-1. | ... | 75 |
| 35. | திரு. M. தனகோபால், ஷராப் வியாபாரம், இராசிபுரம். | ... | 70 |
| 36. | திரு. R. P. இராமசாமி செட்டியார், காரியதரிசி, ஸ்ரீ ராமாஸ்ரமம், சேலம்-6. | ... | 70 |
| 37. | Dr. S. நீலகண்டன், விவசாயக் கல்லூரி, மதுரை-4. | ... | 70 |
| 38. | திரு. க. லக்ஷ்மிநாராயண ரெட்டியார், ஆவணிப்பூர், தென்னாற்காடு மாவட்டம். | ... | 70 |
| 39. | திரு. N. அமிர்தலிங்கம், சேலம்-3. | ... | 70 |
| 40. | இராசிபுரம் எக்ஸ்ரேஸ் & இரத்தப் பரிசோதனை நிலையம், 56, கடைவீதி, இராசிபுரம். | ... | 70 |
| 41. | திரு. K. A சஞ்சீவி செட்டியார் தர்ம கைங்கரியம், சேலம்-1. | ... | 70 |
| 42. | திரு. T. K. சம்பத்து, சின்ன காஞ்சீபுரம். | ... | 70 |
| 43. | டாக்டர் திரு. க. சீதாராமன், 'கதிரி கிளினிக்', சேலம்-6. | ... | 70 |
| 44. | திரு. V. பாலகிருஷ்ணன், மேனேஜர், லக்ஷ்மி விலாஸ் பேங்க் லிமிடெட், பாப்பாநாடு–614 626. | ... | 71 |
| 45. | திரு. P. சுந்தரராஜன், 3, புலிக்குத்தித் தெரு-எண் 3, சேலம்–6. | ... | 70 |
| 46. | திரு. K. S. கோதண்டராமன், 'ராம்குமார் ஸ்டோர்', சேலம்-2. | ... | 70 |

| | | | |
|---|---|---|---|
| 47. | திரு. M. லோகநாதன், L. I. C., வேலூர். | ... | 70 |
| 48. | முருகனடிமை திரு. J. ஜெயராமன்,<br>'அருணகிரி நாதர் இல்லம்', வேலூர். | ... | 70 |
| 49. | திருமதி R. ராதாமணி, பாண்டிச்சேரி. | ... | 70 |
| 50. | திரு. N. M. அருணாசல முதலியார்,<br>தங்க செங்கோட முதலித் தெரு, சேலம்-3. | ... | 70 |
| 51. | அமரர் திரு. S. R. செல்லமுத்து<br>ஞாபகார்த்தமாக,<br>திரு. S. பாஸ்கரன், பெங்களூர்–54. | ... | 75 |
| 52. | திரு. P. K. பொன்னுசாமிக்<br>கவுண்டர், B. A.,<br>'கைலாஸ் பவன்', கோபிசெட்டிபாளையம். | ... | 70 |
| 53. | திரு. K. முத்து,<br>காவேரி நகர், கொமாரபாளையம். | ... | 70 |
| 54. | பராசக்தி & கோ, பவானி. | ... | 70 |
| 55. | திரு. K. P. முத்துக் கவுண்டர், Ex. V. M.<br>கூகலூர். | ... | 70 |
| 56. | திரு. Y. K. V. சந்தானம் செட்டியார் &<br>திருமதி S. கிருஷ்ணவேணி அம்மாள்,<br>இராசிபுரம். | ... | 70 |
| 57. | திரு. G. A. ராதாகிருஷ்ணன் &<br>திருமதி R. சரோஜனு, விழுப்புரம். | ... | 70 |
| 58. | திரு. R. சிவானந்தமணி, விருதுநகர். | ... | 75 |
| 59. | அம்பத்தூர் திருவேங்கடம், சென்னை-53. | ... | 70 |

60. திரு. S. R. சோலைமுத்து, ஸ்ரீ வெங்கடேஸ்வரா ரைஸ் மில், சேந்தமங்கலம். ... 70

61. ஓர் அன்பர், Bitrakunta ... 70

62. திரு. S. P. ஆறுமுகம், லக்கி ஏஜன்சீஸ், திருச்சி-2. ... 75

63. திரு. மனம்சேர சந்திரகாசன், M. A., B. Ed. தலைவர், சேலம் மாவட்ட இந்து சமய மன்றம், சேலம்-7. ... 70

64. திரு. K. K. திருமால் ராவ், தலைவர், தேச பக்தர் இணையம், சேலம்-2. ... 70

65. அமரர் AL. AR. அருணாசலம் செட்டியார், ஞாபகார்த்தமாக திரு. AR. ராமசாமி, (ஜோதிஷ் பண்டிட்) சேலம்–16. ... 70

66. திரு. S. R. ஆறுமுகம், B. A. சேந்தமங்கலம் ... 70

67. திருமதி. K. C. பத்மாவதி தாயார், சேலம்-6. .... 70

68. திரு. S. N. இராஜன், இரயில்வே காலனி, சென்னை-45. ... 70

69. திருமதி. N. கமலம் நீலாகிருஷ்ணன், 'இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன்' இராசிபுரம். ... 70

70. ஸ்ரீ சுவாமி சொரூபானந்தா, தலைவர் சிவானந்தா சாந்திவனம், ஜெகதலா, நீலகிரி Dt. ... 70



# "மதங்களின் ஒற்றுமை"

## அத்தியாயம் — ஒன்று

## பிரார்த்தனைகள்

### அனைவருக்குமான பிரார்த்தனை

**1.**

அன்பு, கருணையெனும் வணக்கத்திற்குரிய
இறைவா!
உனக்கு வணக்கம், நமஸ்காரம்.
நீ சர்வ வியாபி, சர்வ வல்லவன், சர்வமும்
அறிந்தவன்.
நீயே உயிர், அறிவு, ஆனந்தம், பூரணம்.
அனைத்து உயிர்களின் உள் இருப்பவன் நீ.
புரிந்து கொள்ளும் இதயம், சமநோக்கு,
நிலையான மனம், நம்பிக்கை, பக்தி,
தெளிந்த புத்தி இவற்றை எமக்கு அருள்வாயாக.
புலன்களை எதிர்த்து, மனதைக் கட்டுப்படுத்தி,
அகங்காரம், காமம், பேராசை, வெறுப்பு
ஆகியவற்றினின்றும் விடுபட
எங்களுக்கு ஆன்மீக பலம் அருள்வாயாக!

எங்கள் இதயம் தெய்வநெறித் தேக்கமாகட்டும். எல்லா நாமரூபங்களிலும் நாங்கள் உன்னையே காணச் செய்.

எல்லா நாம ரூபங்களிலும் நாங்கள் உனக்கே பணிவிடை செய்ய அருள்!

உன்னை எப்பொழுதும் நினைவில் நிறுத்தி உன் புகழ்பாட, எங்கள் உதடுகளில் உன் நாமம் நடம் புரிய, உன்னுள்ளே என்றும் நாங்கள் இருக்க அருள் வாய் இறைவா!

## 2.

இப்பிரபஞ்சத்தின் கர்த்தா நீ! உலக ரக்ஷகன் நீ! புல்லிலும், பூவிலும் பொலிபவன் நீ! சூரியனிலும், நட்சத்திரங்களிலும் ஒளிர்பவன் நீ! ஆனந்தம் அருளும் ஆண்டவா! பணிகின்றேன் உன்னை!

இனியதேவே! பிறப்பு, இறப்பு என்னும் பிடிகளினின்று நான் விடுதலை பெறுவேனாக! எல்லா உயிரினங்களையும் ஒன்றாகப் பாவிக்கும் சமநோக்கு எனக்கு கிட்டட்டும். பாவம், கீழ்மை ஆகியவற்றினின்று நீக்கி என்னைத் தூய்மையாக்கு. மனத்தைக் கட்டுப்படுத்தி, மனித இனத்திற்கும், உனக்கும் களைப்பின்றி பணியாற்றப் பலமெனக் கருள்வாய்! உன் பணிக்கேற்ற கருவியாக்கிடு என்னை! தூய்மையும் வலிமையும் எனக்கருள்வாய்!

மறைப் பொருட்களுக்கெல்லாம் மறைப் பொருளே! எல்லா இதயங்களிலும் நடனமிடும் இறைவா! உன்னடி பணிகின்றேன். உன் அருளைப் பெறத்தக்க வகையில் என்னைத் தூய்மையாக்குவாயாக. இறைவா! எல்லா உயிரினங்களையும் இணைக்கும் ஆன்ம நூலிழை நீ! பிரபஞ்சத்தின் உயிரினங்கள் அனைத்திலும் பரவி, ஊடுறுவி, பின்னிப் பிணைந்திருக்கிறாய் நீ!

நீயே தெய்வீக ஒளி, அக்ஞான இருளை நீக்குபவன் நீ! நீ கருணைக்கடல், நோயற்ற வாழ்வெனக்குத் தா. உன்னை யாண்டும் நாங்கள் நினைத்துக் கொண்டிருக்க அருள் புரிவாய்! இந்நற்பண்புகளை நான் வளர்த்துக் கொள்வேனாக.

நீ சுயம்பிரகாசம் உடையவன்! என் அம்மை, அப்பன், சகோதரன், நண்பன், பந்து, வழிகாட்டி அனைத்தும் நீயே. இவ்வுண்மையை நான் அறிவேனாக. பேராசை, காமம், அகங்காரம், பொறாமை, வெறுப்பு ஆகியவற்றினின்று நான் விடுபடுவேனாக. உலகம் முழுவதிலும் ஆனந்தம், அமைதி ஆகியவற்றை நான் ஒளி வீசுவதற்கேற்ப என்னை உன் இனிய தூதனாகத் தயாராக்கிடுவாய். உன் பணியிலும், உன்னால் படைக்கப்பட்ட அனைத்து உயிரினங்களுக்குமான நற்பணியில் என் உடல், உள்ளம், பொறிகள் ஆகியவற்றை நான் பயன்படுத்துவேனாக. உன் அழிவற்ற நிலையினை எனக்கருள்வாய். மனித சகோதரத்துவ நிலையை நான் அறிந்து கொள்வேனாக. என்னைப்போலவே அனைவரையும் நேசிப்பேனாக. கருணைக்கடலே! கரங்குவித்து வணங்குகிறேன்.

## 3.

கருணைக்கடலே, நமஸ்காரம். நீயே நிலையான அழகு, ஆனந்தம், அமைதி. நீ பரிபூரணன். நீ பந்தமற்றவன். மனித இனத்திற்குச் சேவை புரியும் மன உறுதியும், தியாக உணர்வும் எனக்கு அருள்வாயாக. உன் பேரருளை எனக்கு வழங்குவாயாக. ஆண்டவனே! நீயே என் ரக்ஷகன். என்னை இந்த உடல் பந்தத்தினின்று விடுவித்து, பிறப்பு, இறப்புச் சுழற்சியிலிருந்து என்னை மீட்பாயாக. அமரநிலை என்னும் அமிர்தத்தினை நான் அருந்திட அருள்புரிவாய்.

உன்பால் தணியாத பக்தியினை என் இதயத்தில் நிரப்புவாயாக. உன்பால் எனக்குள்ள பக்தி என்னும் ஜோதி நாளுக்குநாள் பிரகாசம் அடையட்டும்.

முழுமுதற் பொருளே! முடிவிலாப் பரம் பொருளே! வருத்தம், மாயை, பலவீனம், குறைகள், பற்று ஆகியவற்றினின்று என்னை மீட்பாயாக. சமநோக்கு, ஸ்திரமான மனநிலை, தைரியம், சகிப்புத்தன்மை, அடக்கம், கருணை, தூய்மை, சர்வ ஜீவராசிகளிடத்தும் அன்பு ஆகிய தெய்வீக குணங்களை எங்களுக்கு அருள்வாயாக.

சர்வ வல்லவனே! தீவிரமாகவும், ஆன்மீகக் கடமைகளைத் தினமும் குறித்தவாறு ஆற்றும் உறுதியினின்று நான் பிறழாதவாறு என்னைக் காத்தருள்வாய். என் பாவங்களை மன்னித்தருள்க. ஆன்மீகப் பாதையில் எதிர்வரும் தடைகளினின்று என்னைக் காப்பாயாக. பொறிகளுக்கும், புலன்களுக்கும் அடிமையாகாமல் உறுதியுடன் இருக்க எனக்கு ஆன்ம பலம் அருள்வாய்.

அந்தராத்மனே! நீயே என்னுடைய ஒரே பற்றுக்கோடு. என் வாழ்வின் வாழ்வு நீயே. என் ஆன்மாவின் ஆன்மா நீ. புலன்களுக்கு அப்பாற்பட்ட பேரானந்தம், அமைதி நீ. நீ ஒரே இயல்பால் ஆன சாரம். அஹிம்சை, உண்மை, பக்தி, தூய்மை ஆகிய பெருநெறிகளில் நான் பொருந்தியிருப்பேனாக. உன்பால் எனக்குள்ள பக்தியில் உறுதியாய் நான் இருக்க எனக்கு அருள்வாய். எனக்கு ஞானப் பேரொளி அருள்வாய்.

உன்னத அன்பே! என் இதயத்தில் உறைபவன் நீ. ஞானம் என்னும் உள்ளுணர்வாம் ஞானக்கண்ணை எனக்கு அருள்வாய். அழிக்க முடியாத ஆன்மீகச் செல்வமே என் ஞானம். பற்றற்ற நிலையே என் கிரீடம். என் நற்செயல்களே என் தெய்வீக வங்கியில் உள்ள என் சொத்து.

துறவே என் இதய அணிகலன். உனக்கு கோடி நமஸ்காரம். இறைவா! என்னைக் காத்து, நல்வழி காட்டி ஞானஒளி அருள்வாய். என்னைத் தூய்மை யாக்கு. என்னைப் பற்றற்றவனுக ஆக்கு. என்னைப் பூர்ணனுக்கு. உன் அருளால் அனைவரும் உடல் நலமும், நீண்ட ஆயுளும், அமைதியும், வளமும், ஆன்ம பரிபாகமும் அடைவார்களாக.

## 2. அனைவருக்குமான வாழ்த்து

அனைத்தையும் ஈன்ற அழகுடை அன்னையே!
மனித இனத்தின் புனிதத் தாயே!
வண்ணங்களிலும் வடிவங்களிலும்
வேறுபட்ட அனைவரும் உன் மக்கள்
மெய்யிணக்கம் இதனை அறிந்துகொள்ள
அருளுக எமக்கு.

கண்டங்கள் அனைத்தும் உன் தொட்டில்கள்
ஒவ்வோர் இனமும் உன் குழந்தை
நீலவானும், நீள் கடலும் பரவிட
எங்கும் நிறைகாற்றும், நீரும், மண்ணும்
அனைவரும் பகிர்ந்திட அளித்தாய்.

சுபாவம், கிரியை வேறுபடினும்
சூக்ஷ்ம சக்தி யொன்றே!
நாடுகளிடையே மொழிகள் பலப்பல,
சூக்ஷ்ம ஒலி யொன்றே, அஃதே ஓம்!

புறத்தில் மனிதனும் மனிதனும் வேறு,
அகத்தில் அனைவரும் ஒன்று.
ஞானிகள் கண்ட உண்மை இது.
இருப்பதெல்லாம் இறை யொன்றே
ஒன்றுக்கு மேல் இல்லை
இந்த அத்வைத நிலையே
வாழ்வின் ஒரே உண்மை.

ஒற்றுமையானுல் நாம் வாழ்வோம்,
வேற்றுமையானுல் நாம் வீழ்வோம்.
இறைவனே அப்பன், இவ்வுலகமே அம்மை
மனிதரெல்லாம் சகோதரர்.

ஆதவன் ஒருவன் ஒளி
புறத்துலகில் ஒளி சேர்ப்பது போல்
மாந்தருள் உள்ள பேரொளி
அவர் இருதயத்தில் ஒளியேற்றி
அனைத்து மதம், அறிவியல், கலை
ஆகியவற்றைத் தூண்டிப் பிரகாசிக்கச் செய்கிறது.

ஒன்றே கடவுள், ஞானம், பேரானந்தம்
மாந்தரினம் முழுவதற்கும்,
உயரிய சத்தியம், புலனறியாப் பேருணர்வு
அன்பு, சகோதரத்துவம், நிலையான ஒற்றுமை
என்னும் ஆன்மீகக் கயிற்றுல்
உலகனைத்தும் பிணைக்கும் உன்னதக் கயிறு.

## 3. அனைவருக்குமான கீர்த்தனைகள்

பஜ இயேசுநாதா, பஜ குதா பஜ குதா
பஜ முகமதுவே பஜ அல்லா பஜ அல்லா

பஜ புத்தபிரானே, பஜ அர்ஹத்
பஜ தத்தகாதா, பஜ போதி சத்வா

பஜ கன்பியூஷியஸ் ஞானி, பஜ லாயேட்சு
பஜ ஷிண்டோ தேவா, பஜ மாட்சுதேவா

பஜ ராம ராம, பஜ மஹா வீரா
பஜ கிருஷ்ண கிருஷ்ண, பஜ தீர்த்தங்கரர்களே

பஜ ஜொராஸ்டர் தேவா, பஜ மான்சூர்
பஜ அஹுர் மஸ்தா, பஜ ஷாம்ஸ்டாப்ரிஸ்,

பஜ வாஹிகுரு, பஜ குரு அர்சுன்
பஜ நானக்தேவா, பஜ குரு கோவிந்தா

பஜ புனித ஜோஸப், பஜ புனித மாத்யூ
பஜ புனித பாட்ரிக், பஜ புனித பிரான்சிஸ்
பஜ வியாச மஹரிஷி பஜ சங்கராச்சார்ய
பஜ வித்யாரண்ய, பஜ ராமானுஜாச்சார்ய
பஜ மத்வாச்சார்ய, பஜ நிம்பார்க்காச்சார்ய
பஜ வல்லபாச்சார்ய, பஜ கபீர்தாச.

---

## அத்தியாயம் — இரண்டு

## ஒற்றுமையின் அடித்தளங்கள்

### 4. சமய இணக்கம்

இறைவனை வழிபட்டு அறிவதற்கான நெறியே மதம் சபையிலே விவாதிப்பதற்கான பொருளன்று அஃது. ஆன்மா தன்னையறிந்த பூர்ண நிலையது. மனிதனின் உள்வேட்கையின் தீர்வு அது. எனவே மதத்தை வாழ்வின் லக்ஷியமாகக் கொள்ளுங்கள். வாழ்வின் ஒவ்வொரு நொடியையும் ஆன்மபரிபாகம் பெறுவதற்காகவே வாழுங்கள். மதமில்லா வாழ்க்கை மரணமே.

அனைத்து மதங்களின் சாரமும் ஒன்றே. சக்கைகளில்தான் வேறுபாடு. மனதிற்கும் புலன்களுக்கும் அப்பாற்பட்டது உண்மையான மதம். சடங்குகளுக்கு அப்பாற்பட்டது உண்மையான மதம். சாதாரண நடைமுறைகள், பழக்க வழக்கங்கள், சம்பிரதாயங்கள் இவற்றுக்கெல்லாம் அப்பால் தான் உண்மையான மதம் தொடங்குகிறது. நித்ய பிரம்மனில் உள்ள அமர வாழ்வே உண்மையான மதம். தத்துவம் என்பது மதத்தின் அறிவுபூர்வமான ஆராய்ச்சிப் பகுதி. மதம் என்பது தத்துவத்தின் செயல்முறைப் பகுதி.

அனைத்து மதங்களின் அடிப்படை பக்தி. அகங்காரத்தை அழிக்கிறது பக்தி. உன்னத நிலைக்கு மனதைப் பக்தி உயர்த்துகிறது. ஞானத்தின் திறவுகோல் பக்தி. ஞானத்தில் நிறைகிறது பக்தி. துவைதத்தில் துவங்கி அத்வைதத்தில் பக்தி முடிகிறது. பக்தி சிறந்ததா? ஞானம் சிறந்ததா? என்று வாதம் புரிந்து கொண்டிருப்பவர்கள் இருளில் தடவிக் கொண்டிருப்பவர்கள் ஆவார்கள். உண்மைத் தத்துவத்தை அவர்கள் அறியவில்லை. பராபக்தியும் ஞானமும் ஒன்றே. தத்துவ ஆராய்ச்சியாளர்களுக்கும், சாதகர்களுக்கும், தத்துவ ஞானிகளுக்கும், சமயத்தலைவர்களுக்கும், முனிவர்களுக்கும் முக்கியமான விஷயம் மனிதனுக்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பை அறிந்து கொள்வதாகும். இறைவனுக்கும் உலகுக்கும் உள்ள தொடர்பை ஆச்சார்யார்களும், மதத் தலைவர்களும் விளக்க முயன்றுள்ளனர். வேறுபட்ட தத்துவ ஞானிகள் அளித்துள்ள வேறுபட்ட விளக்கங்களின் விளைவாக வேறுபட்ட மதக் கோட்பாடுகள் தோன்றியுள்ளன.

மூவகைத் தத்துவங்களாவன :

*(1)* துவைதம் *(2)* விசிஷ்ட்டாத்வைதம் *(3)* அத்வைதம் இவை மூன்றும் பரப்பிரம்மத்தை அடைவதற்கான நிலைகள். யோக ஒளியின் படிகள் இவை. இவை மூன்றும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையல்ல. மாறாக, இவை மூன்றும் ஒன்றையொன்று பூர்த்தி செய்பவை. ஆன்மீக அனுபவங்களின் முறையான அமைப்பு முறையாகும். இந்நிலைகள் துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் மூன்றும் இறுதியில் பரம்பொருளை உணரும் அத்வைத வேதாந்த ஞானத்தில் நிறைகின்றன. உள்ளுணர்வின்மூலம் அறியத்தக்க திரிகுணாதீத ஆனந்த பிரம்மமே பரம்பொருள்.

உலகம் உண்மையா, மாயையா என்பதைக் குறித்த சூடான வாதப் பிரதிவாதங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இவ்வுலகம் மெய் என்றால் அதன் தன்மை யாது? 'மாயை என்றால், நாம் இவ் வுலகினை, இல்லாத பொய்யினை எவ்வாறு காண்கி றோம்? மேலை நாடுகளிலும், கீழைநாடுகளிலும் இத்தகைய சிக்கல்கள் நீண்ட காலமாக மாந்தரின் மனதை அலைகழித்து வந்து கொண்டிருக்கின்றன.

'உலகம் மாயை' என்கிறார் சங்கரர். உலகம் உண்மையானது அது ,ஸ்ரீமன் நாராயணனின் தேகம்'' என்கிறார் இராமானுஜர். ''முக்காலத் திலும் பிரபஞ்சம் என்பதே கிடையாது. அனைத்தும் பிரம்மமே—இருப்பதெல்லாம் பிரம்மம் ஒன்றே'' என்கிறார் கௌடபாதர்.

இத்தத்துவ ஞானிகளின் கூற்று அவரவர் நிலையில் சரியே. வேறுபட்ட மன நிலைகள் உள்ளன. அந்தந்த மனநிலைக்கு ஏற்ற கருத்து தேவைப் படுகிறது. நன்கு பரிணமித்த, ஒரு முனைப்பட்ட கூரிய மதியுடைய சாதகரால் கௌடபாதரின் தத்துவத்தை ஏற்றுக்கொள்ள இயலும். மாயை தத்துவத்தையும், தோன்றுமைத் தத்துவத்தையும் புரிந்துகொள்ள முடியாத கீழ்நிலையில் உள்ள சாத கருக்கு இராமானுஜரின் போதனை ஏற்றது. புதிய வரிடம் உலகம் உண்மை என்றுதான் நீங்கள் கூற வேண்டும். வேதாந்த நூல்களைக் கற்றறிந்த பின் னர், தனிமையில் தியானம் சில காலம் பயின்ற பின்னால் அவராலும் மாயைத் தத்துவத்தைப் புரிந்து கொள்ள இயலும்.

எல்லா மதங்களின் சாராம்சமும், அடிப்படை யும் ஒன்றே. புறத்தே உள்ளவைதாம் வேறுபடு கின்றன. அஷ்ட சீல நெறி, இயேசுவின் மலை போதனை, இயமம் நியமசாதனை, சதாச்சாரம்,

ஹிந்துக்கள் அல்லது ராஜயோகிகளின் ஒழுக்க நெறிகள் அனைத்தும் ஒன்றுக்கொன்று நிகரானவை. கடவுளை அறிதற்கான சரியான நெறியினை ஒவ்வொரு மதமும் காட்டுகிறது.

எல்லா மதங்களின் அடிப்படை நெறிகள் ஒன்றே. எல்லா மதங்களும் சாதகர்களை ஒரே இலக்கினுக்கு இட்டுச் செல்கின்றன. பாதைகள் வேறானவை. சேருமிடம் ஒன்றே. ஒவ்வொருவரும் தாம் சொல்வதைச் செய்து காட்டவேண்டும் என்பதே முக்கியமான விஷயம்.

குரான், ஜெண்ட் அவஸ்தா, பைபிள் இவை ஒவ்வொன்றும் பகவத்கீதை போன்றே புனிதமான நூல். தெய்வீக ஞானச் சாரத்தையே எல்லா மத நூல்களும் கொண்டுள்ளன. அஹுரமஸ்தா, ஈஸ்வரன், அல்லா, ஜெஹோவா இவையாவும் கடவுளின் வேறுபட்ட பெயர்களே.

''ஒவ்வொருவராலும் நித்யானந்தம் அல்லது அமரத்துவம் அல்லது இறையுணர்வு பெறமுடியும்'' என்றே ஒவ்வொரு மதமும் கூறுகிறது. ''ஒவ்வொருவரும் உண்மையே பேச வேண்டும். தூய்மை பேண வேண்டும். சுயக்கட்டுப்பாடு பேண வேண்டும். பிறரிடம் அன்பு காட்டவேண்டும். தியானம் அல்லது மன ஒருமைப்பாடு பயிலவேண்டும்'' — எல்லா மதங்களின் அடிப்படை நிலைகள் இவையே. இவைதாம் முக்கியம். மதச் சகிப்புத் தன்மையற்றவனுக்கு ஆன்ம பரிபாகம் கிட்டாது. சகிப்புத் தன்மை இல்லாதவனின் அறிவு குழம்புவதால் அவனால் உண்மையைக் கிரஹிக்க முடியாது. எல்லா மதத் தலைவர்களும் ஆண்டவனின் திருத் தூதர்களே. அவர்கள் அனைவரும் யோகிகள், ஆன்ம பரிபாகம் அடைந்தவர்கள், கடவுளை

அறியும் தெய்வீக உள்ளுணர்வு பெற்றவர்கள். இம் மகான்களின் வார்த்தைகள் நித்யமானவை, புனித மானவை. இம்மகான்களின் போதனைகளும், நூல் களும் இல்லையென்றால், மாந்தரின் முன்னேற்றத் துக்கும், விடுதலைக்கும் வழியே இல்லாது போயிருக் கும். ஒவ்வொரு மகானும் அறிவை நுணுகி ஆராய்ந்து அவருடைய சமுதாயத்திற்கேற்ற மதத் தைத் தோற்றுவித்தார். இம் மகான்களின் ஆசி நம்மை உயர்த்தட்டும்.

எல்லா மதங்களின் ஒன்றுபட்ட தன்மையை உணருங்கள். உண்மைத் தத்துவத்தை அறிந்தவர், எல்லா மதங்களின் சாரத்தையும் கிரஹித்தவர், சூடான வாதப் பிரதி வாதங்களில் ஈடுபடமாட் டார். நீங்கள் அனைவரும் ஒரே இதயத்துடன் மகிழ்ச்சியுடன் வாழ்வீர்களாக. எல்லா மதங்களின் அடிப்படை ஒற்றுமையை உணர்ந்து கொள்வீர் களாக. எல்லா மத ஸ்தாபகர்களின் ஆசிகளும் உங்கள் அனைவருக்கும் கிட்டுவனவாக.

## 5. மதமும், மனிதனும்

பிரபஞ்சத்தில் பிறப்பு, இறப்பு போன்ற வேறு பட்ட காட்சிகள் மூலம் இயங்கி வரும் தெய்வீக ஆட்சி மனித வாழ்க்கை ஒரு நாடகமே என்னும் உண்மையை உணர்த்துகிறது. இந் நாடகத்தில் பல பாகங்கள் நடித்துக் காட்டப்படுகின்றன. ஆனால் எந்த ஒரு பாகமும் முழுமையானதன்று. எந்த ஒரு பாகமும் அதனை ஏற்று நடிப்பவர்க்கு நாடகத்தின் முழு அம்சத்தையும் கொடுப்பதும் இல்லை. மேடையில் தோன்றும் ஒவ்வொரு நடிகரும், முழு நாடகத்தின் உள்ளடக்கமான அம்சமாகத் தன்னைக் காட்டிக் கொள்ளும் வகை யிலே நடந்து கொள்கிறார்.

நாடகத்தின் எல்லா நடிகர்களுடனும் நடிகர் ஒருவர் உணர்வுமூலம் ஒன்றியிருக்கிறார். இத்தன்மையிலே ஒவ்வொரு நடிகரும் இங்கு வாழ்ந்து காட்டுகிறார். இதுவே எல்லா மதங்களின் குறிக்கோள். மனிதன் ஒவ்வொருவரும் முழுமையின் ஓர் அங்கமே. ஒவ்வொருவரும் பிரபஞ்ச முழுவதின் சட்டத்திற்குக் கட்டுப்பட்டு, பொதுவான லக்ஷியத்தை எட்டுவதற்குக் கடமைப்பட்டவர் என்பதையே மதம் உணர்த்துகிறது. எவராலும் தனித்து இயங்க முடியாது. சத்திய நெறி எனும் இந்நெறியுள் அனைவரின் நலமும் அடங்கியுள்ளது.

கடவுளின்றி மனிதன் இல்லை. கடவுளே முழுமை. மனிதன் அதன் ஓர் அங்கமே! எல்லா உயிரினங்களிலும் இருப்பது ஒரே கடவுள். காரண காரியமென்னும் மாற்ற இயலாத ஒரே விதியுள்ளது. ஆன்ம பரிபாகம் என்னும் ஒரே மதம் தான் உள்ளது. ஒவ்வொருவரும் பரமாத்மா. நவீன கண்டுபிடிப்புக்களால், தன் முயற்சியின்றி லௌகீக வாழ்க்கையில் சுகம் பெருகி வருவதால், லௌகீக வாழ்க்கைக்குப் பிரதான்யம் அளித்து வாழ்க்கையில் மதத்தின் பங்கினை மாந்தர் உணர முற்படுவதில்லை. ஆனால், நடைமுறையில் காண்பதென்ன? இவ்வுலகத்தின் பொருட்களின் பயனையும், பொருட்கள்பற்றிய அறிவையும் நம்பிச் சார்ந்திருக்க முடியாது என்பதே நிதர்சன உண்மை. தனக்காக இவ்வுலகின் புறவளங்களையும், மறைந்திருக்கும் வளங்களையும் முழு அளவில் பயன்படுத்திக் கொண்ட பிறகும் கூட மனிதனுக்கு மகிழ்ச்சி பெருகிவிடவில்லை. உலகம் முன்னேறிவிடவும் இல்லை. திருப்தி, மகிழ்ச்சி, அமைதி எங்கே இருக்கிறது?

தன் நிலையை முழுவதும் அறிந்து உலகின் பகுதிகளைப் பற்றியும் முற்றிலும் உணர்ந்து இருக்கும்

எவராலும் லௌகீக முறையில் முன்னேற்றத்திற்கு முயல்வதால் அமைதி கிட்டுகிறது என்று கூற முடியுமா ?

உண்மையான மனிதனின் அக உண்மைக்கு லௌகீகப் பார்வை சற்றும் பொருந்தாத ஒன்று. ஏனெனில் நெறியான வாழ்க்கைக்குத் தேவை யானது புலன் இன்பம் அன்று; மதப் பயிற்சியே. மதம் என்பது வெறும் தத்துவம் என்று எண்ணுதீர் கள். மதம் என்பது மறு உலகம் பற்றியது என்றோ மூடநம்பிக்கையாளரின் விருப்பமான சம்பிரதாய மென்றோ பகுத்தறிவுக்கு ஒவ்வாத உணர்ச்சி யாளரின் நடைமுறை என்றோ நினைத்துவிடாதீர்கள். வாழ்க்கையின் ஆராய்ச்சிப்பூர்வமான அறிவே மதம். தான் எப்படி இருப்பதாக மனிதன் எண்ணிக்கொள்கிறானோ அப்படியில்லாமல், மனிதன் எவ்வாறு இருக்கிறானோ அப்படி இருப்ப தைக் காட்டும் அறிவே மதம். உயரிய முழுமை நிலைக்கு வழி காட்டுவது மதம். முழுமை நிலை அடையக்கூடிய ஒன்று என்றால், மனிதனின் இலட்சி யத்திற்கு ஏற்ப அம்முழுமை நிலையை அடைவதற்கு உபாயமாக இருப்பது மதம் ஒன்றே.

## 6. மனித இனத்திற்கு மதத்தின் பயன்

உண்மையான மதம் என்பது அனைவராலும் ஏற்றுப் பின்பற்றக்கூடியது. அனைவருக்கும் பொது வானது. ஒவ்வொருவரையும் ஒரே இலக்கிற்கு இட்டுச் செல்லக்கூடியது. சடங்குகளும், தத்துவங் களும் மதத்தைப் பிரதிபலிப்பவையாகா. உயர்ந்த ஒழுக்கத்தையும், அறத்தையும் அடிப்படையாகக் கொண்டு பரநலத்தையும் பிரபஞ்சத்தின்பால் அன்பையும் இயக்கமாகக் கொண்டு பின்பற்றப்படும் மத ஒழுக்கமே முக்கிய

மானது இம்மதத்திற்கு எவருடைய அங்கீகாரமும் தேவையில்லை. இம் மதத்தைப் புரிந்து கொள்ள விசேஷமான நூல்களோ, வகுப்புகளோ தேவை யில்லை. இம்மதம் இருப்பது நம் இதயத்திலே. இம் மதம் இயங்கும் களம் இவ்வுலகம். இவ்வுலகமே இம்மதத்தினைக் கடைப்பிடிப்பதற்கான பயிற்சிப் பள்ளியும் ஆகும்.

இத்தகைய மதத்தின் தூண்டுதலும், ஆதரவும் இல்லாத எச்செயலும் செய்யப்படக் கூடாது. அன்பு, சேவை என்னும் இம் மதத்தினை இதயத்துள் கொண்டு தினசரி வாழ்வில் இதனைக் கடைப் பிடிக்க வேண்டும்.

பூரணம், சுதந்திரம், நித்யம் ஆகியவற்றின் மறு பெயரே கடவுள். இதனை உணர்ந்துகொண்டால், வேறுபாட்டிற்கு இடமே இல்லை. இக்கருத்து ஒற்றுமை, லயம் ஆகியவற்றை நோக்கி அனைவரை யும் இட்டுச் செல்லும்.

எல்லா மதங்களும் ஒரே உற்பத்தி ஸ்தானத் தையே கொண்டவை. கடவுளுக்கென்று ஒரு மதம் கிடையாது. ஆனால், அறிவிலும் உணர்ச்சியிலும், ஆன்மீகத் துறையிலும் வெவ்வேறு படித்தரங்களில் இருப்பவர்களுக்காக வெவ்வேறு பாதைகளைக் கடவுள் அருளியுள்ளார். எல்லா மதங்களும் ஒரே குறிக்கோளை கொண்டவை. எல்லா மதங்களும் ஒரே லக்ஷியத்தை நம் முன்னே வைக்கின்றன. மனக் கட்டுப்பாடு, புலனடக்கம், வெவ்வேறு நாம ரூபங்களில் மறைந்துள்ள ஒரே ஆத்மனை அறிந்து கொள்வது ஆகியவையே மதத்தின் லக்ஷியங்கள்.

இந்த லக்ஷியம் பின்பற்றப்பட்டால், மனி தனின் இதயம் தூய்மையாகும். அவனுடைய சுயநல, அகங்கார பாவம் அவனுடைய ஆன்ம பரிபாகத்திற்கேற்ப மாறியமையும். இயேசுவின்

மலை உபதேசம், புத்தரின் அஷ்டசீலம், பதஞ்சலியின் இயமநியமம் ஆகியவையெல்லாம் ஒரே சீலத்தின் அடிப்படையில் அமைந்த போதனைகளே. பெயர்கள்தாம் வேறு. எப்பெயரிட்டு அழைத்தாலும், ரோஜாவின் இயல்பு மாறப்போவதில்லை.

பரமாத்மா எங்கெனும் வியாபித்துள்ளார் என்று உபநிடதங்கள் கூறுகின்றன. ஸ்ருதிகளை ஆராய்ந்தறிந்த ஞானிகள் அனைவரின் போதனைகளிலும் இம் மையக்கருத்தே பரவியுள்ளது. ஞானிகள் வெவ்வேறாகக் கூறியிருப்பினும் உண்மை ஒன்றே. ஒரே உண்மையான பரமாத்மா எங்கெனும் பரவியுள்ளது என்பதே அனைத்தின் சாரம். பரமாத்மா ஒன்றே இருப்பது. வேறேதும் இல்லை. இவ்வுலகத்தின் பொருட்கள் யாவும் மாயையே. பொருட்களிலிருந்து பொறிகளை நீக்கி, பின்னர் மனம் சலனமற்று இருக்கும்போது, அறிவை ஊடுருவிக் கடந்து உள்ளுணர்வு என்னும் அகக்கண் திறக்கும் போதே மனிதன் ஒவ்வொன்றையும் கடவுளாகக் காண்கிறான். இத்தகைய உள்ளுணர்வு கொண்ட ஆத்மனுக்கு (பிரம்மஞானிக்கு) இருப்பதெல்லாம் ‘‘கடவுள் ஒன்றே, வேறேதும் இல்லை’’. இவையனைத்தும் என் அன்பிற்குரியவை. இவற்றின் மாயைத் தோற்றங்களினால் இவற்றை நான் விரும்பவில்லை. இவையனைத்தும் ஆண்டவனாகிய என் சுய ஆத்மா! என்று யாக்ஞவல்கியருடன் சேர்ந்து பிரம்மஞானி கூறுகின்றார்.

இயேசு, புத்தர், கிருஷ்ணர், முகமது, ஸொராஸ்டர், கன்பியூஷியஸ் ஆகியோர் அனைவரும் அன்பு, இணக்கம் என்னும் ஒரே செய்தியைத்தான் அவரவர் சீடர்களுக்கு ஏற்ப வெவ்வேறு வார்த்தைகளில் உபதேசித்துள்ளனர். மகான்கள் ஒவ்வொருவரின் போதனையும் இறையுணர்வு என்னும் இறுதி இலக்கிற்கே நம்மை இட்டுச் செல்கிறது.

ஹிந்து வேதங்களிலும் ஒன்றுக்கொன்று இணையாகச் சொல்லும் சில கருத்துக்களைக் காண்கிறோம். ஞானயோகம், பக்தியோகம், ராஜயோகம், கர்மயோகம் ஆகியவை சில உபநிடதங்களில் மிகவும் உன்னதமான அத்வைத ஞானம் அடங்கியுள்ளது. பலவகையான காணிக்கைச் சடங்குகளை வேதங்கள் விதிக்கின்றன. நேர்மை நெறி சிறந்தது என்கின்றன ஸ்மிருதிகள். கடவுளிடம் பக்தியை ஏற்படுத்துகின்றன புராணங்கள். எனினும், வித்தியா மாயையாகத் தோன்றிடினும் எல்லா நெறிகளும் சாதகரை ஒரே இலக்கிற்கே இட்டுச் செல்கின்றன.

மதங்களிடையே ஒற்றுமையைக் காண முயல்பவர்கள் சிறந்தவர்கள். சகிப்புத்தன்மையற்றவர்கள் தங்கள் மதப் போதனையின் சாரத்தையே அறிந்து கொள்ளாதவர்கள். மனித இனத்தின் துயரத்திற்கெல்லாம் அடிப்படைக் காரணம் ஒவ்வொருவரும் அவரவர் மதக் கோட்பாட்டின் அடிப்படையைப் புரிந்து கொள்ளாமல் அல்லது அதனை அலட்சியப்படுத்துவதேயாகும்.

ஒருவரின் எண்ணங்களும், வார்த்தைகளும், செயல்களும் அவருடைய உள்ளுணர்வைப் பிரதிபலிக்கவில்லையென்றால், எல்லா இதயங்களிலும் ஒரே கடவுள்தான் உள்ளார் என்ற அறிவினால் என்ன பயன்? அடுத்தவருக்கு நன்மை செய்யத் தவறும்போது அல்லது அயலவரை அன்பாக நடத்தாதபோது மனித இனத்தின் தந்தை கடவுள் என்று திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பதால் என்ன பயன்?

''உண்மை பயிலு. உன் நடத்தை தூய்மை. நேர்மை தழுவியதாக இருக்கட்டும். உன்னை நீ நேசிப்பதைப் போலவே அடுத்தவரையும் நேசி.

உன் பொருட்களை மற்றவர்க்குப் பகிர்ந்து கொடு. மற்றவரின் உணர்வுகளை ஒரு போதும் புண்படுத்தாதே! அனைவரிடமும் அன்பு காட்டு. உன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக்கொள். தைரியம், நேர்மை ஆகிய பாதையைப் பின்பற்று!''. இவையே எல்லா மதப் போதனைகளின் மையக் கருத்து. ஒவ்வொருவரும் இவற்றைக் கடைப் பிடிக்க வேண்டும். அப்போதுதான் அவரவர் மதத்தைச் சார்ந்தவராக அவரவர் கருதப்பட முடியும்.

மற்ற மதங்களின் குறைபாடுகளை ஆராய முற் படுவது மத உணர்விற்கு நேர்மாறுபாடான ஒன்ருகும். அப்போதுதான் சச்சரவுகள் எழு கின்றன. ''என் மதம் உயர்ந்தது. என் மதம் கி. மு. ஐந்தாம் நூற்ருண்டில் தோன்றிய மிகப் புராதன மதம்'' இத்தகைய கீழான கருத்துக்கள் தவருன எண்ணங்களால் தோன்றியவை. அனைத்து மதங்களும் இறைவனிடமிருந்து தோன்றியவை. ஒவ்வொரு மதமும் சிறந்ததே.

மதச் சகிப்பு தன்மை குறித்தும், சமய இணக்கம் பற்றியும் பேசுவது எளிது. ஸர்வஜீவப் பிரியம் கொள்வதும், சமரச நோக்கு கொள்வதும் மிகவும் கடினம். மனத்துள் துளிர் விடும் தீய குணங்களை அவ்வப்போது அகற்றிவிட வேண்டும். வெறுப்பு, பொருமை, முன் அபிப்ராயம், அகங் காரம் இவையனைத்தும் மனத்தினின்று அகற்றப்பட வேண்டும். இவ்வுணர்வுகளே தடைகள். இத் தடைகளை அகற்றினுலே ஒருவருக்குப் பரவுணர்வு கிட்டும்.

மனித இயல்பின் எதிர்மறை உணர்வுகளை அகற்றுவது கடினம். ஆனுல் இடைவிடாத கடின

உழைப்பின்மூலம் வெற்றி காண முடியும். ஆரம்பத்தில் மனம் அடங்காமல் புரட்சி செய்யும். புலன்கள் எதிர்ப்புக் காட்டும். உடன்பாடான உணர்வுகளை வலுப்படுத்த முயலுவதன்மூலம் எதிர்மறை உணர்வுகளை வெற்றி கொள்ள வேண்டும்.

பிறருக்குத் துன்பம் இழைக்கா நன்னெறியில் ஒருவர் பொருந்த வேண்டும் என்றால், பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். தொடர்ந்து பொறுமையுடன் இருக்க முயன்று கொண்டிருக்க வேண்டும். மற்றவர்பால் கடுமையாக ஏசாமலும், அடுத்தவரின் அடித்தளமான மனித கௌரவத்திற்கு இழுக்காக ஏதும் செய்யாமலும் இருந்திடப் பழக வேண்டும். பொறுமை என்பது அடித்தளமான நன்னெறி. பொறுமையைப் போன்றே, பரநல உணர்வு, தூய்மை, உண்மை, சமரச நோக்கு, பரந்த மனப்பாங்கு, அன்பு ஆகியவையும் சிறந்த பூஷணங்கள். இந் நெறிகள் அனைத்தையும் ஒவ்வொருவரும் பகுத்தறிவுடன் பின்பற்றவேண்டும். உண்மை பேசவேண்டும் என்பதற்காக, மற்றவர் கூறிய இரகசியங்களை வெளியிடலாகாது. தாராள மனப்பான்மை வேண்டும் என்பதற்காக குடும்பத்தின் அடிப்படைத் தேவைகளைப் புறக்கணித்துப் பிறருக்கு வாரி வழங்கலாகாது. தன்னலமற்று இருக்கிறேன் என்று கூறி, பிறரையும் அப்படியே இருக்க வேண்டும் என்று கூறலாகாது. எல்லாரையும் நேசிக்க வேண்டும் என்பதற்காகத் தன்னை மலிவாகத் தாழ்த்திக் கொண்டு பிறரின் ஏச்சுக்கும் வெறுப்புக்கும் ஆளாகலாகாது.

தூய்மையான அன்பு எல்லாத் தளைகளையும் அறுத்தெறிய வல்லது. எல்லாத் தடைகளையும் அழிக்க வல்லது. எல்லாக் குறைபாடுகளையும், வேறுபாடுகளையும் நீக்க வல்லது. அனைத்துலகின்

மீதும் சூரியன் ஒரே விதமாகப் பிரகாசிப்பதுபோல, உண்மையான அன்பு அனைத்து ஜீவராசிகளின் பாலும் என்றும் பாய்ந்தோடுகிறது. இவ்வன்பே இறைவன். வெறுப்பு என்னும் நோயைஅழிக்கவல்ல மருந்து இவ்வன்பே. இதயத்தில் தூய்மையான அன்பு கொண்டவர் மற்றவர் இதயத்தையும் வெற்றி கொள்கிறார்.

இத்தகைய தூய்மையான அன்பினை எவராலும் எதிர்த்துப் போராட முடியாது. தூய்மையான அன்பு நிறையும் இதயம் கொண்டவருக்கு, அவருடைய மனச் சாட்சியின் குரலே இறைவனின் குரலாகும். பிறர் துன்பம் துடைக்கும் பணிகளில் அவர் ஈடுபடுகிறார். தன்னலமற்ற பணியின் காட்சி அவர். இறைவனின் திருவருள் அவர் மூலம் வெளிப்படுகிறது. எப்போதும் அவர் மகிழ்ச்சியுடன் இருக்கிறார். பயமே அறியாதவர் அவர். எதிர்ப்படும் அனைவர்பாலும் இணக்கம், அமைதி ஆகியவற்றைத் தோற்றுவிக்கிறார் அவர். தூய்மையான அன்பு என்னும் மதமே மனித இனத்தின் நிரந்தர ஒற்றுமையின் அடித்தளம். மனித இனத்தின் மதம் இதுவே. மனித இனத்திற்கு மதம் என்பதன் பொருள் இதுவே.

## 7. உண்மையான மதம்

உள்ளுணர்வு என்னும் அகக்கண்ணைத் திறப்பதிலிருந்து மதம் தொடங்குகிறது. உள்ளுணர்வு இறையுணர்வை நோக்கி நம்மை இட்டுச்செல்கிறது. மதக் கட்டுப்பாடு உள்ளுணர்வு என்னும் அகக் கண்ணைத் திறக்கும் லக்ஷியத்தைக் கொண்டது. இந் நிலையை அடைவதற்குமுன் குழப்பமாக இருக்கும். பல்வேறு மதநெறிகளை அறிவு காண்கிறது.

லௌகீக நோக்கங்களால் இதயம் ஆலேகழிக்கப்பட்டு மதவேறுபாடுகள் எழுகின்றன. ஆனுல் உண்மை யாக எல்லா மதச் சச்சரவுகளும் லௌகீக நோக்கங் களால் தோன்றிய அறிவு பூர்வமான உணர்ச்சி பூர்வமான சச்சரவுகள். இந்த லௌகீக நோக்கங் களே அகற்றிவிட்டால், மகான்கள் தோற்றுவித் துள்ள ஏதேனும் ஒரு மத நெறிப்படி மதம் மனிதனே பாதுகாப்பான சற்குருவின்பால் இட்டுச் செல்கிறது. அரேபியாவின் முகமதின் வழியானலும் சரி, ஜெருசலத்தின் கிறிஸ்துவின் பாதையானாலும் சரி, இமாலயத்தின் அடிவார ரிஷிகேஷ் வழியானாலும் சரி, உள்ளுணர்வை நோக்கிச் செல்லும் இப்பயணத்தின் நிலேகள் உண்மை, தூய்மை, அன்பு ஆகியவையே. பயணி யின் உணவும், நீரும் இவையே.

இதயபூர்வமான மதமே மனித இனத்தின் உண் மையான நிலேயான ஒற்றுமையின் அடிப்படை. அன்பு என்னும் மதமே இதயபூர்வமான மத மாகும். பொருமை, வெறுப்பு, கீழ்மையான எண்ணம் ஆகியவற்றினின்று விடுபட்டிருந்தாலே மாந்தர்களிடையே ஒற்றுமை நிலவ முடியும். முதலில் இதயத்தில் தூய்மை இருக்க வேண்டும். அறவழியில் அமைந்த பண்பாடு மிகவும் முக்கிய மானது.

ஆன்ம பரிபாகம் அச்சத்தை அறவே அகற்று கிறது. ஆன்ம பரிபாகமே உண்மையான மதம் ஆகும். பயம், மரணம் ஆகியவற்றை வெற்றி கொள்வதே உண்மையான மதம் ஆகும்.

## 8. மதங்கள் அனைத்தும் ஒன்றே.

**நித்திய ஆத்மனின் குழந்தைகளே!**

உங்கள் அனைவருக்கும் அமைதி கிட்டுவதாக! அமைதியின்றி மகிழ்ச்சியில்லே. மகிழ்ச்சியற்ற

வாழ்வு என்பது பயனற்ற வாழ்வு. ஏனென்றால் அத்தகைய வாழ்க்கை ஒரு போராட்டம், துன்பம், தன்னிறக்கம், இறையுணர்வினின்று விலகிச் செல்வது. எனவே அமைதியின் ஆட்சி என்றால் விடுதலையுள்ள வாழ்க்கை மனித இனத்தின் விடுதலை, அனைத்து உயிரினங்களின் விடுதலை என்று பொருள். அனைவரும் அமைதிக்காக முயலுகின்றனர். அனைவரும் தடையில்லா மகிழ்ச்சியை நாடுகின்றனர். அனைவரும் நித்யானந்தத்திற்காக ஏங்குகின்றனர். நாம் உயிர்ப்பதும், நினைப்பதும் இதற்காகவே.

காற்று வீசுவதும், நீர் குமிழியிட்டுச் செல்வதும் இந்நோக்கத்திற்காகவே. பூரணத்தை அடைய முயல்வதற்கன்றி, தன் வாழ்வின் பரிமாணம், பரப்பு ஆகியவற்றுக்குத் தடைகளாக இருப்பவற்றை நீக்குவதற்கன்றி வேறு எதற்காகவும் ஏதும் இயங்குவதுமில்லை, மாறியமைவதும் இல்லை. எண்ணத்திலும், செயலிலும் தோன்றும் இத்தகைய உந்தலினால் ஏற்படும் இயக்கமே மதம் என்று மாந்தரால் அழைக்கப்படுகிறது.

மதம் என்பது வெறும் தத்துவம் அன்று. வசதியான கற்பனையோ, ஒரு சிலரின் பொழுது போக்கு நடவடிக்கையோ இல்லை. எவராலும் எதிர்க்க முடியாத சர்வ வியாபகமான உணர்வின் வெளிப்பாடே மதமாகும். ஒவ்வொருவரும் வெவ்வேறாக நினைக்கின்றார்கள். அதே சமயத்தில் அனைவரும் கடவுளையே நினைக்கின்றனர். பாதைகளும் ஏணிகளும் வேறுபடலாம். ஆனால் போய்ச் சேரும் நகரமோ, ஏறியடையும் கூரையோ ஒன்றே. உன்னதமான உண்மை என்னும் ஒரே ஒளியின் முன்னே கீழ்நிலையில் உள்ள பிற வேறுபாடுகள் மறைந்து ஒன்றாகிவிடும். விலங்கும்,

இறைவனும் சேர்ந்த கலவை மனிதன். மனிதனிடம் உள்ள மிருக இயல்பு மனிதனை வேறுபாடு, துயரம், சச்சரவு, ரத்தக்களறி, மரணம் ஆகிய கீழ் நிலைகளுக்குத் தள்ளுகிறது. தெய்வீக உண்மையோ மனிதனை நித்தியமான தூய உன்னத ஆத்ம நிலைக்கு உயர்த்துகிறது. பிரபஞ்சத்தின் உயிராக அதன் மையத்தில் ஒளிரும் ஒரே இறைவனின் நிலைக்கு உயர நம்மைத் தூண்டவல்லது மதம் ஒன்றே.

எனவே, தீவிர மதவாதிகளே! மதப்போர்கள், வறுமை, துயரம், அமைதியின்மை இவற்றுக்கெல்லாம் காரணம் உங்களால் காண முடியாதா? ஞானம், உண்மை, நீதி ஆகியவற்றின் இயல்பினைப் புரிந்துகொள்ள முடியாத இயலாமை இத்தகைய தீமைகளுக்கான வித்தினை விதைக்கிறது. பிறர் உணர்வுகள்பால் வெறுப்பினைக் காட்டுவதும், இங்கு வாழும் பிற இனங்களை வெறுப்பதும் மனித உணர்வு அன்று. மனித வாழ்வில் அலைமோதும் மிருக இயல்பு, மனிதப் பண்பாட்டின் சாரத்தைப் புறக்கணித்து, இன்றைய யுவர்களும், யுவதிகளும் உத்தியோகக் கல்வியை நாடிச்செல்வது பெருந்தவறு. மனித இனத்தின் மகிழ்ச்சிக்கும், விடுதலைக்கும் பாடுபடுவது கல்வி நிறுவனங்களின் குறிக்கோளாக இருந்தால், அவை பாடத் திட்டத்தில் அன்பு, உண்மை, தூய்மை, பரநலம், ஞானம், நீதி ஆகிய வாழ்க்கை நெறிகளையும், முழுமையான வாழ்க்கை வழியையும் சேர்க்கவேண்டும். இவையே முக்தி நிலைக்கு நம்மை உயர்த்தி வைக்கும் மதத்தின் இதயம் ஆகும். மத உணர்வு இல்லாத கல்வி முறையில் உயிரே இல்லை. ஏனெனில், வாழ்வின் குறிக்கோளின் அர்த்தமே மதம். மதமே வாழ்க்கைப் போராட்டத்தின் குறிக்கோள். மதம் புறக்கணிக்கப்பட்டால், மனிதனிடம் மிஞ்சியிருப்பது எலும்பும், சதையுமே.

மதம் என்பது ஆராய்ச்சிக்கு இடம் கொடுக்காத ஓர் உணர்வு என்ற உணர்விஞலேயே நவீன நாகரிகம் மதத்தை வெறுக்கிறது. நேர் மாருக, சிந்தனைக்கும் ஆராய்ச்சிக்கும் உட்பட்ட வாழ்வின் ஒளி மதம். மதம் என்பது இவ்வுலகின் மிகச் சிறந்த மேதையின் மூலம் வெளிப்படும் ஞான ஒளி. மதமில்லாமல் பண்பாடு இல்லை. வாழ்க்கையில் மகிழ்ச்சியளிப்பது மட்டுமே மதத்தினுடைய குறிக்கோள் இல்லை. உண்மையான வாழ்வின் சாரத்தை அறிந்துகொள்ள முடியாத விவேகமற்ற நிலையின் விளைவே லௌகீக உணர்வு தூய்மையற்ற இதயமும், மயக்க நிலையில் உள்ள அறிவும் மதத்தினை அறிந்து கொள்ள உதவா. அறிவின் எல்லைக் கோட்டிலே உண்மையான மதம் ஆரம்பிக்கிறது. மதம் என்பது உணர்ச்சியோ, அறிவோ அன்று. ஆனல் நேர்முகமாகப் பெறப்படும் நம்பிக்கை. இந்நம்பிக்கை தேவையால் ஏற்பட்டதன்று. எவரும் சம்பந்தப்படாமல் ஏற்பட்ட நம்பிக்கை. வேதங்கள் உபநிஷத்துக்கள் ஆகியவற்றின் போதனைகள், புத்தரின் போதனை, இயேசு நாதரின் போதனைகள் இவை யாவும் தாஞகத் தோன்றியவை. இவற்றின் தன்னிச்சையான தோற்றம் இவற்றைப் போதித்த மகான்கள் மூலம் நமக்குத் தெரியப்படுத்தப் படுகின்றன. அறிஞன் எவராலும் தான் அறிவின் எல்லையைத் தொட்டு விட்டேன் என்று மார்தட்டிக் கொள்ள முடியாது. அனுபவத்தின் மூலமே அறிவு விருத்தியாகிறது. மனிதனின் ஆழமான உணர்வினை லௌகீக உணர்வு நிறைவு செய்ய இயலாது என்பதைத்தான் லௌகீகத்தில் ஊறித் திளைத்த பலர் ஆன்மீக வாதிகளாக மாறிய வரலாறு நமக்குப் புலப்படுத்துகிறது. இந்த ஆழ் உணர்வு அல்லது ஆத்மன் எல்லாருக்கும் ஒன்றே. எனவே மதமும் ஒன்ருகத்தான் இருக்க வேண்டும். சட்டையும், மேலாடையும், வெவ்

வேருனவையாக இருந்தபோதும் அவற்றையணிந்து கொள்ளும் மனிதன் ஒருவனே.

எனவே, கடவுளின் புத்திரர்களே! விவாதம் வேண்டாம், சச்சரவுகள் வேண்டாம். ஆசியர், ஐரோப்பியர், அமெரிக்கர் என்றோ ஹிந்துக்கள், கிறிஸ்துவர்கள், முஸ்லிம்கள் என்றோ எவரும் இலர். இருப்பவர் அனைவரும் ஆண்டவனின் மைந்தர்கள். அனைவரும் பிரபஞ்சத்தின் ஆலயத்தில் இறைவனை வழிபடுகின்றனர். அனைவரும் உண்மையை நாடிச் செல்வோர். இயற்கை என்னும் பள்ளியில் அனைவரும் கற்பவர். இறைவனை நோக்கி நடைபோடும் மனிதர்கள் அனைவரும் முடிவற்ற நிலை நோக்கி முடிவுள்ளதென்று எண்ணப்படுவது நீள்கிறது. எனவே அமைதியே உங்கள் பிறப்புரிமை. மதமே உங்கள் பாதை. உலக சகோதரத்துவமே உங்கள் லக்ஷியம். ஒவ்வொருவரின் இலக்கும் பூரண நிலை எய்துவதே. உடலுக்கு உணவு தேடுவது மட்டும் போதாது. ஆன்மாவின் உணவு மதம். மதமின்றி வாழ்க்கை மரணமேயாகும். நாகரிகம் என்பது கேலிக்கூத்தாகும்.

உண்மையான மதத்தின் இலக்ஷியத்தை உணர்ந்து கொள்வீர்களாக! உலக முழுவதிலும் பூரண அமைதி நிலவட்டும். சர்வ வல்லமை பொருந்திய ஆண்டவன் அனைவருக்கும் அருள் புரியட்டும்.

## 9, மதங்கள் அனைத்தும் ஒன்றே — பல்வேறு முறைகள் பின்பற்றப்படுகின்றன.

கடவுள் ஒருவரே. அவருடைய படைப்புக்கள் வேறுபட்டவை. உண்மை ஒன்றே. அதன் வெளிப்பாடுகள் வேறுபட்டவை. ஒளியின் நிறம்

வெண்மை — ஆனால் அது ஏழு முக்கிய நிறங்களால் ஆனது. மதம் ஒன்றே. ஆனால் அதன் நடைமுறைப் பழக்கங்கள் பலப்பல.

தத்துவரீதியாக ஒரே ஒரு மதம்தான் இருக்க முடியும். ஏனெனில் கடவுள் ஒருவரே. ஆனால் ஒரே நடைமுறையுள்ள ஒரே ஒரு மதம் இருக்க முடியாது.

எல்லாப் பிரிவுகளிலும் ஒரே தன்மையில் இறை வேட்கை இருக்கிறது என்ற அடிப்படையில் மதம் ஒன்றே. கடவுளை நெருங்குவதற்கான வழிமுறை களும், மற்ற சடங்குகளும் வேறுபட்டுத்தான் ஆகவேண்டும். ஆனால், இறுதி இலக்கு ஒன்றே.

உள்ளதை வலியுறுத்துவதிலும், இல்லாததை நிராகரிப்பதிலும் மதம் ஒன்றே. ஆனால் மாயையை விளக்கும் நடைமுறையில் வேறுபாடுகள் உள்ளன. ஏன்?

வேறுபாடே இயற்கையின் இயல்பு. ஒரே அச்சில் இருவரைக் காண்கிறோமா? உணர்வுகள், மன இயல்புகள் நபருக்கு நபர் வேறுபடுகிறார். எனவே இரண்டு நபர்களுக்குக் கடவுளைக் குறித்து ஒரே கருத்து இருப்பதைக் காண்பது கடினம்.

நடைமுறையில், பூகோளநிலை, வரலாற்றுப் பின்னணி, இன இயல்பு, மன இயல்பு ஆகியவற்றை அனுசரித்து வேறுபட்ட மதங்கள் அல்லது கருத்துக் கள் இருப்பது இயல்பு.

பரிணாமம் என்பது இயற்கையின் இயல்பு. குறை களைக் களைந்து, தடைகளை நீக்கி, மேனிலை நோக்கி முன்னேறவேண்டும் என்ற உந்தல் ஒவ்வொரு வரிடமும் உள்ளது. தடையில்லாத நல்வாழ்க்கை,

மகிழ்ச்சி ஆகியவற்றின்பால் வேட்கையும், துன்பம், மரணம் ஆகியவற்றைக் கண்டு அச்சம் எல்லாரிடமும் யாண்டும் உள்ளன. இத்தகைய பரிணுமமே, துன்பம், மரணம்பால் உள்ள அச்சமே நாகரிகத் தொடக்க காலத்தில் மதத்தைத் தோற்றுவித்தன.

நடைமுறை உலக வாழ்க்கையில் ஒவ்வொருவரின் வாழ்க்கையையும் இருந்து இயக்குகின்ற, எளிதில் காண்பதற்கரிய, மர்மமான அப்பெரும் சக்தியும் மதத்தின் தோற்றத்திற்கு ஒரு காரணமாகும். அளப்பரிய, அறிவாற்றலுக்கு அப்பாற்பட்ட இச் சக்தியினை ஆழ்ந்து அறிந்துகொள்ளும் துடிப்பும், மரணத்திற்குப்பின் உள்ள நிலையினை அறிந்துகொள்ள துடிக்கும் ஆர்வமும் மதம் தோன்றிய வரலாற்றுக்கான அடுத்த காரணமாகும்.

இறுதியாக மனிதகுலத்தின் பரஸ்பர தன்மை, ஒருவருக்கொருவர் சுமுகமான தொடர்பு, அமைதி, லயம் ஆகியவை இணைந்த சமூக வாழ்க்கை அமைவதற்கான உறுதியான இயக்கமும் மதம் தோன்றியதற்கான காரணமாகும்.

இவ்வாறு, பல்வேறு இடங்களில் பல்வேறு காலங்களில் பல்வேறு அமைப்புக்களில் மதங்கள் தோன்றியுள்ளன. அவற்றின் புறச் சடங்கு முறைகளில் வேறுபாடுகள் இருப்பினும், அவற்றின் அடிப்படைக் கோட்பாடுகள் ஒன்றே. பல்வேறு மக்கள் இனங்களிடையே இருந்துவரும் வேறுபட்ட கலாசாரப் பின்னணி, வரலாற்றுப் பாரம்பரியம், பழக்கவழக்கம் ஆகியவற்றின் காரணமாகவே மதங்களின் நடைமுறைகளில் வேறுபாடுகள் தோன்றியுள்ளன.

இன்று மக்கள் அனுசரித்து வரும் முக்கிய மதங்கள் பதினொன்று. அவை ஒவ்வொன்றிலும் பல்வேறு உட்பிரிவுகளும், அவை தொடர்பான கருத்துக்களும் காணப்படுகின்றன. காலத்திற்கு ஏற்ப ஏற்பட்ட மாற்றங்களின் காரணமாகவே இத்தகைய உட்பிரிவுகள் ஏற்பட்டுள்ளன. எம் மதமும் மாற்றமேதுமின்றி இருந்த நிலையிலேயே இருக்க முடியாது. ஏனெனில் காலத்தின் தேவைக்கு ஏற்ப அனுசரித்து மாறவேண்டும். எனவே இவ் வுட்பிரிவுகள் தவிர்க்க முடியாதவை. இவை இனி வரும் காலத்திலும் தொடர்ந்து இருந்து வரும். இவ்வுட்பிரிவுகளின் மூலமதத்தின் கலாசார, பாரம் பரிய, ஐக்கிய தன்மையின் காரணமாகவும், இவ்வுட் பிரிவுகளைச் சார்ந்து சிறந்த பெரியார்கள் இல்லாத காரணத்தாலும் இவ்வுட்பிரிவுகள் தனி மதங் களாக மாருமல் இருந்து வருகின்றன.

துவக்கத்தில் புத்தசமயம் இந்து மதத்தின் உட் பிரிவாகவே இருந்து வந்தது. நாளடைவில் இந்து மதம் தோன்றிய நாட்டிலேயே, புத்த மதத்தால் தன் தனித்தன்மையை நிலை நிறுத்திக் கொள்ள முடிந்தது. ஆனுல் இன்று அம்மதம் இந்தியாவிற்கு வெளியே செல்வாக்குடன், அந்தந்த நாட்டின் உள் நாட்டின் கலாசாரப் பின்னணியுடன் திகழுகிறது.

சீக்கிய மதமும் இந்து மதத்தின் ஒரு கிளையே. வரலாற்றுத் தேவையின் அடிப்படையில், முஸ்லீம் படையெடுப்பின் விளைவாக, இந்தியாவில் இஸ்லாம் மதம் நுழைந்தபோது தோன்றியது சீக்கிய மதம். இன்றுவரை வரலாற்று நிகழ்ச்சிகளின் காரண மாகவே, சீக்கிய மதம் அதன் தனித் தன்மையில் இருந்து வந்துள்ளது. இந்து மதத்தில் எதிர்ப்புக் காட்டும் திறன் போதிய அளவில் இல்லை. இந்து

மதத்தில் ஜாதி வேறுபாடுகளும், சடங்குகளாலான சிக்கல்களும் நிரம்பியுள்ளன. இவையுள்ளவரையில் சீக்கிய மதமும் இந்நாட்டில் தனித்தே இருக்கும்.

சரி, இப்போது பதினொரு மதங்கள் மட்டுமே இருக்க என்ன காரணம்? இன்றும் கடைப் பிடிக்கப்பட்டு வரும் முக்கிய மதங்களின் மகான்கள் கொண்டிருந்ததைப் போன்று ஆற்றலும், படர்ந்து பரவியீர்ந்து வாழும் இயக்கமும், மற்ற மதத் தலைவர்களுக்கும் இருந்திருக்குமேயானால் இன்னும் எண்ணற்ற மதங்கள் இங்கே இருக்கும்.

சாக்ரடீசின் சீடர்களால், அசோகரைப் போன்ற பேரரசர்களை மாற்ற முடிந்திருக்குமானால், இன்றும் சாக்ரடீஸ் மதம் செல்வாக்குடன் இருந்திருக்கும்.

ஆரம்பத்தில் அசோகர் அளித்த பேராதரவினாலும், அவருடைய தூதர்களின் அறிவுத் திறனாலும், பிற்கால புத்த மதப் பிக்ஷுக்கள் கிழக்காசிய மன்னர்களை, அன்பு, அமைதி என்ற புத்தரின் போதனையால் மாற்றிய திறனாலுமே புத்த சமயம் உலக மதங்களுள் ஒன்றாக இன்னும் திகழ்ந்து வருகிறது.

ஆரம்ப நிலையில் ஆசியாமைனரில் இருந்த பிரபுக்களையும் செல்வர்களையும் மாற்றியதாலேயே கிறிஸ்துவ மதம் பரவத் தொடங்கியது. ஐரோப்பிய நாடுகளின் மன்னர்கள் பிற்காலத்தில் மாற்றப் பட்டபோது, அந்நாளில் மக்களை ஆட்டியடக்கி, அச்சுறுத்தி வந்த அரசர்களின் அடிச்சுவட்டிலேயே பாமரமக்களும் மாறியமைந்தது எதிர்பார்க்கப் பட்ட ஒன்றே.

போரின் மூலம் பரவியது இஸ்லாம் மதம். அந்நாளில் பிற நாடுகளில் படையெடுத்த முஸ்லீம் தலைவர்கள் இஸ்லாமை ஏற்காதவர்பால் தொடுத்த புனிதப் போராகத் தங்கள் படையெடுப்புக்களைக் கூறிக் கொண்டே வாளேந்தி வந்தனர்.

இந்து தர்மத்தின் வரலாறோ வேறானது. தனியானது. இந்து மதம் தனிப்பட்ட எவராலும் ஸ்தாபிக்கப்படவில்லை. இந்து தர்மம் ஒரே ஒரு தனி மதமன்று. பல மதங்களின் இணைப்பே இந்து தர்மம். பல்வேறு மதங்கள் இயல்பாக ஒன்றுடன் ஒன்று தொடுக்கப்பட்ட தொகுப்பு அது. ரிஷிகள், மகான்கள் பலர் இந்து மதத்தின் வளர்ச்சிக்கு வழி கண்டுள்ளனர். தன் கொள்கையைப் பிறர்பால் திணிக்க இந்து மதம் போர் வழியை என்றும் பின் பற்றியதில்லை.

மனித உள்ளத்தில் விளையக் கூடிய மிக உன்னத மான தத்துவம் இந்து மதத்தில் பொதிந்துள்ளது. அதே சமயத்தில் அதன் தூய்மைக்கு ஊறாக இருக்கக்கூடிய காலத்திற்கு ஒவ்வாத காலங்கடந்த, பிரிவினையுள்ள, மாற்றம் காண முடியா உறுதியான நடைமுறைகளையும் கொண்டுள்ளது. இந்திய வரலாற்றில் நாம் காணும் பல வீழ்ச்சிகளின் விளைவே இத்தகைய நடைமுறைகள் என்பதையும் நாம் கருத்தில் கொள்ளவேண்டும். இத்தகைய உறுதியான, வளைக்க முடியாத நடைமுறைகள் இல்லாதிருந்தால், பாரசீகம், எகிப்து, ஆப்கானிஸ்தானம், மற்ற மத்திய கிழக்கு, தென்கிழக்கு ஆசிய நாடுகளில் நேர்ந்ததுபோல இந்திய மக்கள் அனைவரும் ஒட்டு மொத்தமாக இஸ்லாம் மதத்திற்கு மாற்றப்பட்டிருப்பர்.

மனிதரின் நிலையை உயர்த்துவதற்கு ஒவ்வொரு மதமும் உன்னதமான ஆன்மீக லக்ஷியங்களையும்,

ஒழுக்கக் கோட்பாடுகளையும் கொண்டுள்ளது. அதே சமயத்தில் ஒவ்வொரு மதத்திலும் காலத்திற் கொவ்வாத காலங்கடந்த சடங்குகளும், நடைமுறைகளும் உள்ளன. ஒவ்வொரு மதமும் மிக உன்னதமான நீதிக்கோட்பாடுகளைக் கொண்டு உள்ளது. அதே சமயத்தில், ஒவ்வொரு மதத்திலும், மதத்தின் பெயராலும், மதத்தின் அறநூல் கோட்பாடுகளின் பெயராலும், நீதிக்கும், அந்தந்த மதத்தின் அடிப்படைக் கோட்பாட்டுக்கும் புறம்பான பல நடைமுறைகள் உள்ளன.

மொத்தமாகப் பார்க்கும்போது, பல்வேறு மதங்களின் அற நூல்களில் முரண்பாடுகள் இருக்கத்தான் செய்கின்றன. பண்டிதர்கள் பல்வேறு வியாக்யானங்கள், விளக்கங்கள், பல்வேறாகக் கொடுத்தாலும், முரண்பாடுகள் இருக்கத்தான் செய்கின்றன. எந்த மதமும் மாற்றமின்றி ஒரே நிலையில் எப்போதும் இருந்துவிட முடியாது. ஒரு மதத்தின் அறநூல்கள் அனைத்தும் ஒரே காலத்தில் ஒரே ஒருவரால் எழுதப்பட்டவையல்ல. நபருக்கு நபர் கருத்து வேறுபடுகிறது. உணர்வுகள் மாறுபடுகின்றன. சமூக நிலைகளும், மனநிலையும், மதிப்பீடுகளும் காலத்திற்கேற்ப மாறுகின்றன என்பதை நாம் கருத்தில் கொள்ளவேண்டும்.

மிகச் சிறந்த கோட்பாட்டினை ஏற்றுக்கொண்டு மற்றவற்றைப் பற்றிக் கவலைப்படாமல் இருப்பதே சரியான நெறி, தகுதியற்றதை விலக்கி விடுவதே விவேகம். அது சரியா தவறா என்ற விவாதமே தேவையில்லை. ஒருவருக்கு ஏற்றதாக இருப்பது அடுத்தவருக்கு ஏற்றதாக இருக்காது. இன்று நமக்கு ஏற்றதாக இருப்பது ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு காலங்கடந்தது ஆகிவிடும். தான் சார்ந்துள்ள மதக்கோட்பாடுகளுள் பத்துப் பன்னிரண்டையாவது ஒருவர் கடைப்பிடித்தொழுகினால்

போதுமானது. அடிப்படைக் கோட்பாடுகள் எக் காலத்தும் மாறுதவை. உலகம் முழுவதிற்கும் எல்லா நிலேகளிலும் ஏற்புடையவை அவை.

ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சார்ந்தவராக ஒருவர் இருந்தபோதிலும், அறிவுள்ள ஒருவர் தம் மதத்தில் கூறப்பட்டுள்ள எல்லாக் கருத்துக்களேயும் ஏற்கும் நிலேயில் இருக்க மாட்டார். பரம்பரையாக ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சார்ந்திருக்கும் ஒருவர் தன்னேப் பொறுத்தவரையில், தன் மதத்தைக் குறித்து, தனக்கென்று ஒரு கருத்தைக் கொண்டிருப்பார்.

எனவே, மனித இனம் பத்துப் பன்னிரண்டு மதங்களேச். சார்ந்திருந்தாலும், அறிவுள்ள ஒவ்வொருவரும் அவருடைய சொந்த மதத்தையே, அஃதாவது, அவருடைய மதத்தில் அவருக்கு எது எது புரிவதாகத் தோன்றுகிறதோ அதையே அனுசரிக்கிருர்.

கடைசியில் தோன்றிய பெரிய மதமான சீக்கிய மதம் தோன்றிய கி. பி. 15-ஆம் நூற்றுண்டிற்குப் பிறகு, காலம் எவ்வளவோ மாறிவிட்டது. இன்று ஒரு புதிய மதத்தைத் தோற்றுவிப்பது மிகவும் கஷ்டம். கடந்த ஐந்நூறு ஆண்டுகளில் எந்தச் சிறந்த மதமும் தோற்றுவிக்கப்படவில்லே. மூல மதங்களின் கோட்பாடுகள் பற்றிய புதிய வியாக்யானங்களும், அம்மதத் தத்துவங்கள் பற்றிய ஆராய்ச்சிகளுமே நிகழ்ந்துள்ளன.

முன்னேறிய நாடுகளின் மதச் சார்பின்மைக் கருத்து பரவி வருகிறது. தன் நாட்டு மக்கள் அனேவரையும் இன்று எந்த அரசாலும் ஒரு மதத்திற்கு மாற்ற முடியாது. இஃது அரசியல்

தத்துவங்களின் யுகம். மாந்தரின் உடனடித் தேவைகள் பொருளாதார, சமூக முன்னேற்றமே. இன்றைய மக்களின் வாழ்வில் மதம் இரண்டாம் இடத்தை வகிக்கிறதே தவிர, மதம் ஒரு பிரச்சனை யன்று.

இன்று மக்கள் ஒவ்வொருவரும் தம்மைப் பற்றியே எண்ணிக் கொண்டுள்ளனர். முப்பத்தைந்து ஆண்டுப் பொதுவுடைமை ஆட்சிக்குப் பிறகும்கூட ருஷிய நாட்டு அரசாங்கத்தால் அந் நாட்டு மக்களில் மூன்று சத வீதத்தினரை மட்டுமே பொதுவுடைமைக் கருத்துக்கு மாற்ற முடிந்திருக்கிறது. வரும் பல நூற்றாண்டுகளில் மக்களை ஒட்டு மொத்தமாக எந்தவொரு புதிய மதத்திற்கும் மாற்றிவிட முடியாது. இப்போதுள்ள அல்லது இனி வரும் எந்த அரசாங்கத்தாலும் எந்த ஒரு புதிய மதத்தையும் பரப்ப முடியாது. இப்போதுள்ள மதங்களின் கோட்பாடுகளுக்கு புதிய வியாக்யானங்கள் கூற, புதிய தத்துவங்களை நிறுவ சங்கரர்களும், இராமாநுஜர்களும், மார்ட்டின் லூதர்களும், காந்திகளும், ஹெகல்களும் வேண்டுமானால் தோன்ற முடியும். மதங்களில் இன்னும் பல உட்பிரிவுகள் தோன்றலாம். ஆனால் அவை மூல மதங்களை விட்டு விலகி தனித்து, புதிய மதங்களாக ஆகிவிட முடியாது.

தனி மனிதரைப் பற்றிய எண்ணங்கள் பரவி வரும் இந்நாளில், முன்னேற்றக் கருத்து பரவி வரும் இந் நாளில் அறிஞர்கள், புறத்தே குறிப்பிட்ட ஒரு மதத்தைப் பரம்பரையாகச் சார்ந்திருக்கும் போதிலும், அவரவர் விருப்பத்திற்கேற்ப, மதம் சம்பந்தமான கோட்பாடுகளைக் கொள்ளத் தொடங்குவர்.

அனைத்து மதங்களின் அடிப்படை நெறிகள் ஒன்றாகவே இருக்கும். மனித புருஷார்த்தத்தின் பூரண நிலைக்கான நாட்டம், எல்லாவகையான, குறைபாடுகள், பலவீனங்கள் ஆகியவற்றைக் கடப்பதற்கான உந்தல், இறைவனை அடைவதற்கான தொடர்ந்த நாட்டம் முடிவில்லா முழுதான பேரிறைபற்றி அறிந்துகொள்ளும் முழுதான பேராட்டம், இவையனைத்தும் மதத்தின் பொதுவான இலட்சியம். இந்த இலட்சியத்தை அடைவதற்கான வழிமுறைகள் எண்ணற்றவையாக, இங்குள்ள மக்கள் எண்ணிக்கையளவில்கூட இருக்கலாம். வேறுபட்ட முறைகள் கடைப்பிடிக்கப்பட்ட போதிலும், மதம் ஒன்றே.

## 10. எல்லா மதங்களின் பொதுவான குறிக்கோள்

அஞ்ஞான இருளிலிருந்து மாந்தரை எழுப்புதல், மாந்தருக்கு ஆன்மீக அறிவு கிட்டச் செய்தல், அகங்காரம், சுயநலம், பந்தபாசம் ஆகிய தளைகளிலிருந்து மாந்தரை விடுவித்தல் ஆகியவையே ஒவ்வொரு மதத்தின் லட்சியமாகும்.

''நல்லவனாக இரு. நல்லதைச் செய்'', என்பதே அனைத்து மதங்களின் அடிப்படையான போதனை. ''சேவை செய், அன்பு காட்டு, தியானம் செய், உன்னில் இருக்கும் பரமாத்மாவே நீ என உணர்ந்துகொள்'' என்று இதனைக் குறிப்பிடலாம்.

ஒவ்வொருவரின் உள் இயல்பிலும் நேரான, எதிர்மறையான பக்கங்கள் உள்ளன. இவ்வியல்புகள் அவரவர் விருப்பம், நடத்தை ஆகியவற்றின் மூலம் வெளிப்படுகின்றன. மனிதர் ஒவ்வொருவரிடமும் உள்ளுறைந்துள்ள நேர் இயல்புகளின்

துணைக்கொண்டு அவருடைய எதிர்மறை இயல்புகளை வெற்றிகொள்ளச் செய்வதே மதத்தின் இயக்கம்.

ஆத்ம சாதகம் என்பது, மற்றவர் எவரும் எதுவும் எதுவோ அதுவே நாமும். ஒவ்வொருவர் அகத்தே உறைவதும் முடிவில்லாப் பரம்பொருளின் மறுமதிப்பு என்பதே உணரும் முயற்சியாகும். படைக்கப்பட்டுள்ள எல்லாம் ஒன்றே என்னும் இந்த அறிவால், மற்றவரை அன்புடன் சகிப்புத் தன்மையுடன், பாசத்துடன், நல்லுணர்வுடன் நடத்தும் மனப்பாங்கு தோன்றுகிறது.

உபந்யாசங்களைக் கேட்பதால் மட்டுமோ, வெறும் அரைமனத்தாலான விருப்பத்தினுல் மட்டுமோ அகங்காரத்தையும், சுயநலத்தையும் அழித்துவிட முடியாது. இந்த விலங்குத்தன்மையினின்று விடுபடுவதற்கு எண்ணம், செயல் ஆகியவற்றில் தினசரி உண்மையாக முயலவேண்டும்.

மனம் மாறவில்லையெனில், மதச் சடங்குகளால் எவ்வித பயனும் இல்லை. அவரவர் மதத்தின் அடிப்படை நெறிகளை பெரும்பாலோர் கடைப்பிடிக்காத போது அனைவருக்கும் பொதுவான சமயம் அமைப்பதில் வெற்றி கிட்டாது. எல்லா மதங்களின் அடிப்படை நெறிகளும் இணக்கமானவை. எல்லா மதங்களின் லக்ஷியமும் ஒன்றே. இவ்வடிப்படை நெறிகளையே உலகப் பொது மதம் என்று குறிப்பிடலாம்.

நல்லதை வலியுறுத்த வேண்டும். ஏனெனில் இஃது உலகத்திற்குப் பொதுவான அம்சம். உண்மையான மதத்தின் அடிப்படை அறநெறி. ஒழுக்கமின்றி மதம் இல்லை. இடத்திற்கு இடம் ஒழுக்க நெறிகளின் தொகுப்பு சற்று மாறுபடலாம். ஆனுல் உலக முழுவதிலும் ஒழுக்க நெறிகளின் அடிப்படை ஒன்றே.

ஒழுக்க நெறிகள் அனைத்திற்கும் அடிப்படை அன்பு. மதத்தின் செயல் முறைக்கு அன்பே திறவு கோல். அன்பும், அமைதியும் நாணயத்தின் இரு பக்கங்கள். தன்னலமற்ற அன்புநெறியில் ஊறியவர் அமைதியில் திளைக்கிறார். அமைதியைப் பொழிகிறார். அன்பு காட்டுபவர், கடவுளை அறிகிறார். ஏனெனில் அன்பே கடவுள், கடவுளே அன்பு.

உங்கள் சொந்த மதத்தின் அடிப்படைக் கோட் பாடுகளை உங்கள் மதத்தைச் சேர்ந்த மற்றவர் முன் வைத்து, அன்றாட வாழ்க்கையில் இவற்றைக் கடைப்பிடிக்கும் முறைகள் பற்றி விளக்கங்கள் கொடுக்கச் சொல்லுங்கள். உங்கள் மதத்தை சார்ந்தவர்முன் மாந்தர் பற்றியும், மாந்தர் பரிணமம் பற்றியுமுள்ள மதத்தின் அடிப்படை நெறிகளைக் கூறுங்கள். தம் மதமே உயர்ந்தது என்று ஒருவரை உணரச் செய்யும் கருத்துக்களைக் கூறாதீர்கள். மற்ற மதங்களைப் பற்றிக் குறிப்பிட நேர்ந்தால், அம்மதங்களும் உங்கள் மதங்களின் அடிப்படை நெறிகளையே போதிக்கின்றன என்று கூறுங்கள். மத இணக்கத்திற்கு இதுவே வழி. உலக சமாதானத்திற்கு இதுவே வழி. வளத்திற்கு இதுவே வழி. இறுதியாக, இறைவனை அடைய இதுவே வழி.

## 11. எல்லா மதங்களின் அடிப்படை ஒற்றுமை.

*[1950 ஆம் ஆண்டு டிசம்பர் 24 ஆம் நாளன்று கிறிஸ்துமஸ்ஸை யொட்டி சுவாமி ஸ்ரீ சிவானந்த மஹராஜ் அகில இந்திய வானொலியின் பம்பாய் நிலயத்திலிருந்து ஆற்றிய பேருரை.]*

நித்ய ஆத்மாக்களே !

உன்னதமான பேராத்மாவின் கீற்றுக்களான உங்கள் அனைவருக்கும் அன்பான ஆசிகள். படைப்புக்குக் காரணமாகவும், படைக்கப்பட்ட அனைத்தின் இலக்ஷியமாகவும் திகழும் முடிவில்லா பேரொளியின் கதிர்கள் நீங்கள். வேறுபட்டவையாகக் கருதப்படும் எல்லா மதங்களின் அடிப்படை ஒற்றுமை என்னும் மிக முக்கியமான விஷயத்தைப் பற்றி உங்களிடம் பேசுவதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

இந்தச் சமயத்தில் இவ்விஷயத்தை மிக முக்கியமானதாக நான் கருதுகிறேன். ஏனெனில், மதங்களிடையே உள்ள அடிப்படை ஒற்றுமையைப் புரிந்துகொள்வதாலேயே இன்று உலகெங்கும் மக்களைத் துயரத்திலும், குழப்பத்திலும் ஆழ்த்தும் மேலோட்டமான மத வேறுபாடுகளால் விளையும் சச்சரவுகளை அறவே அகற்ற முடியும் என்னும் அசைக்க முடியாத நம்பிக்கை எனக்குள்ளது. இவ்வுலகில் உள்ள அனைத்து மதங்களும், அனைவருக்கும் பொதுவான ஒரே லக்ஷியத்தை அடைவதற்கான வழிகளே என்பதை நீங்கள் புரிந்து கொண்டுவிட்டால், பிரபஞ்சத்திலுள்ள எல்லா உயிரினங்களும் ஒரே தன்மையானவை என்பதைப் புரிந்துகொள்வீர்கள். தெய்வீகம் நிறைந்த ஆன்மீக ஞானமே எல்லா மதங்களுக்குமான பொதுவான லக்ஷியம். நீங்கள் அழியக்கூடிய இந்த உடல் அல்ல. க்ஷணத்திற்கு க்ஷணம் மாறக்கூடிய மனமும் அல்ல. எப்போதும் பரிசுத்தமான, சுதந்திரமான ஆன்மாவே நீங்கள். இந்த ஞானத்தை மாந்தருக்கு உணர்த்துவதே அனைத்து மதங்களின் பொதுவான லக்ஷியம். பிறப்பில்லா, நித்யமான புராதனமான ஆன்மா இது என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள்.

இதுவே உங்கள் உண்மையான இயல்பு. நாம ரூபத்தில் அடைக்கப்பட்டுள்ள புருஷர் இல்லை நீங்கள். நீங்கள் ராமசாமியோ, முகர்ஜியோ அல்லர். மாறக்கூடிய மேகம் என்னும் இம்மாயைக்குள் ஒரு விபத்தால் நீங்கள் சிக்கிக் கொண்டிருக்கிறீர்கள். விழிப்புணர்வு பெற்று, நீங்கள் தூய ஆத்மன் என்பதை உணருங்கள். ஒவ்வொரு மதமும் இதனையே செய்ய முயலுகிறது. ஆன்மீக ஞானம் ஊட்டுவதே எல்லா மதங்களின் அடிப்படைக் குறிக்கோள். சர்வ வியாபகமாக உள்ள பரமாத்மாவின் ஓர் அங்கமே நீங்கள். பரமாத்மா இவை அனைத்திலும் பரவியுள்ளது. இருப்பது எல்லாம் ஒரே ஆத்மன்தான் என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

## பலப்பல மதங்கள் ஏன் ?

எல்லா மதங்களின் பொதுவான குறிக்கோள் இஃது எனின், பலப்பல மதங்கள் ஏன்? இலக்ஷியம் ஒன்றுதான். ஆனால், இந்த இலக்கினை எய்த முயலும் மாந்தர் வேறுபட்ட ரசனை, மன இயல்பு, திறமை ஆகியவற்றைக் கொண்டிருப்பவர்கள். எனவே, அந்நாளைய ஞானிகள் மன இயல்பு, திறமை ஆகிய வேறுபட்ட நிலைக்குப் பொருத்தமான பாதைகளை வகுத்துத் தந்துள்ளனர். எனவே புரிந்துகொண்டவர்களுக்கு, வேறுபட்ட மதங்கள் மனிதனிடத்தில் குழப்பத்தை உண்டாக்குபவையல்ல என்பதும், மாறாக நமது முன்னோர்கள் விவேகத்திற்கு எடுத்துக்காட்டு என்பதும் புரியும். அந்தந்தக் காலத்தின் தேவைக்கேற்ப, மக்களின் தேவைக்கேற்ப, நமது முன்னோர்கள் பாதைகளை வகுத்துத் தந்துள்ளனர். ஏனென்றால் வெவ்வேறு காலத்தில் அவதரித்த ஞானிகளும், மகான்களும் வேறுபட்ட வாழ்க்கைத் தரங்களில் மக்கள்

வாழ்ந்து வந்ததைக் கண்கூடாகக் கண்டு வந்துள்ளனர். எனவே வெவ்வேறு மதங்களின் புறச் சடங்குகளில் மேலோட்டமான வேறுபாடுகளை நீங்கள் காணலாம். ஆனால் மாந்தரின் குறைபாடுகளையும் துயரங்களையும், வரையறைகளையும் கடந்து ஒரே ஆத்மனே எங்கும் எல்லாம் என்னும் பெரிய ஞானத்தைப் பெற்று, நித்தியானந்தம் பெறும் இலக்ஷியத்தில் மதங்களிடையே எங்கும் என்றும் வேறுபாடே இல்லை. எல்லாம் அந்த ஒன்றில்தான் இருக்கிறது. அந்த ஒன்றுதான் எல்லாம். ''ஏகம் சத் விப்ரா பஹுதா வதந்தி''. உண்மை ஒன்றே, ஞானிகள் வெவ்வேறாக அதனை அழைக்கின்றனர் என்னும் உபதேசத்தின் முக்கியத்துவத்தை இதன் மூலம் உணருவீர்கள்.

## பொதுவான அடிப்படை

இலக்ஷியம் ஒன்றாக இருப்பதுடன் கூட, மத ஒழுக்கத்திலும் அடிப்படை நெறிகள் ஒன்றே. தேவையற்ற சிறு விஷயங்களில் வேறுபாடுகள் இருக்கலாம். ஆனால், மாந்தரின் கீழ்மையான இயல்பை மாற்றி, முழுமையான ஒழுக்க நெறிகள் மூலம் தூய்மை சேர்ப்பதே எல்லா மதங்களின் குறிக்கோள். தூய்மை சேர்த்தல், சதாச்சாரம் அல்லது நன்னடத்தை, நல்லியல்புகள், ஸத் விவகாரம் அல்லது உண்மையான தொடர்புகள் மூலம் நற்குணங்களை வளர்த்து ஒழுக்க நெறியில் பூர்ணநிலை எய்தல் இவையே உலகின் எல்லா மதங்களின் அடிப்படையான குறிக்கோள்கள். தெய்வீக நிலை நோக்கி மாந்தரை இட்டுச் செல்லும் நல் வாழ்க்கையை அடிப்படையாகக் கொள்வதையே எல்லா மதங்களும் அடிப்படையாகக் கொண்டுள்ளன.

உண்மை, தூய்மை அனைத்துயிர்கள்பால் அன்பு ஆகியவையே நல்வாழ்க்கையின் அடித்தளம். எம்மதத்திலும் அதன் அடிப்படை நெறிகளே முக்கியமானவை. ''நல்லவராக இரு நல்லதையே செய். அன்பு காட்டு. தூய்மை பேணு. எல்லா உயிரினங்களிடத்தும் பரிவு காட்டு மாந்தரிடையே வேறுபாடு பாராட்டாதே. அனைத்தையும் ஒன்றாக ஆன்மீக அணைப்பில் ஏற்றுக்கொள்'' என்னும் போதனையே எல்லா மதங்களின் அடிப்படை. ஒவ்வொரு முகத்திலும் இறைவனையே கண்டு, தன்னலமற்ற சேவையில் தானாக ஒவ்வொருவரும் ஈடுபடவேண்டும் என்று எல்லா மதங்களும் போதிக்கின்றன. எல்லார் அகத்துள்ளும் நிறைந்துள்ள இறைவழிபாடாக இத்தகைய சேவையைக் கருதவேண்டும். அழியக்கூடிய இவ்வுலகப் பொருட்களின் கவர்ச்சிக்கு ஆளாகாமல், பொறிகளுக்கும், புலன்களுக்கும் அடிமை ஆகிவிடாமல், கடவுட் காட்சி பெறுதலே வாழ்வின் குறிக்கோள் என்பதை மறந்துவிடாமல் வாழ்வினை நடாத்த வேண்டும் என்றே எல்லா மதங்களும் அறிவுறுத்துகின்றன.

நம்பிக்கையை வளர்ப்பதற்கும், பணிவுடன் வாழ்வதற்கும், பொறிகளையும் புலன்களையும் அடக்குவதற்கும், கோபம், பேராசை போன்ற கீழ்த்தரமான உணர்ச்சிகளைக் கட்டுபடுத்துவதற்கும், உயர்ந்த குறிக்கோள்களுடன் தெய்வீக வாழ்க்கை நடத்துவதற்கும், உயரிய தன்னலமற்ற சேவை செய்வதற்கும், அன்புடன் தியாகம் செய்வதற்கும், குறைவில்லா ஒழுக்கத்தைப் பேணுவதற்கும் வழிவகைகளை எல்லா மதங்களும் கற்பிக்கின்றன. நம் முன்னோர்களான மகான்கள், ஞானிகள் ஆகியோரின் போதனைகள் யாவும் தெய்வீக வாழ்க்கையையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. இத்தகைய தெய்வீக வாழ்க்கையே

எல்லா மதங்களின் அடித்தளம். அந்நாளைய ஞானிகள், மகான்களின் போதனைகளின் சாரமும் இதுவே.

பாரதவர்ஷத்தின் ஞானிகள், முகமது நபிகள், இயேசுகிறிஸ்து, புத்தர், ஸொராஸ்டர், தீர்த்தங்கரர்கள், ஆகிய மகான்கள், சைதன்யர், கபீர், இராமானந்தர், ஸ்ரீ இராமகிருஷ்ணர் ஆகிய ஞானிகள் ஆகியோரின் வாழ்வு, போதனைகள் யாவும் இதே இலக்ஷியத்தையே பறைசாற்றி வந்துள்ளன. பல்வேறான முத்துக்களையும், ரத்தினங்களையும் ஒரே ஹாரமாக இணைக்கும் தங்க இழைபோன்று, மனித இயல்பை மாற்றித் தூய்மை சேர்த்தல், தெய்வீக வாழ்க்கை நடத்தல் ஆகியவையே எல்லா மதங்களையும் இணைக்கும் இழையாகவும், எல்லா மதங்களின் அடித்தளமாகவும் உள்ளன. இறைவனுக்கு அணிவிக்கத்தக்க மாலையாக இந்த ஹாரம் உள்ளது. மனித இனம் அனைத்துக்கும் பொதுவான ஆலயம் இறைவனின் இருப்பிடம். ஹாரத்திலுள்ள முத்து ஒவ்வொன்றும் தான் தனி என்று உணரத் தலைப்பட்டால், "அன்பானவர்களே, நீங்கள் அனைவரும் ஒருவரே! இந்த ஒற்றுமையை மறந்து வேற்றுமையைப் பரப்புவது, ஒரே குடும்பத்திலுள்ள குழந்தைகள் வெவ்வேறு வண்ண சட்டைகள் அணிந்து கொள்வதால், ஒருவருக்கொருவர் மாறுபட்டவர் என்று கூறுவதுபோல முட்டாள்தனமானது" என்று ஹாரம் கற்களைப்பார்த்துக் கூறும்.

## ஒற்றுமையை உணர்வீர்களாக.

தூய்மையான வெள்ளைத் துணியில் ஓர் ஓவியம் இருப்பதாகக் கற்பனை செய்துகொள்ளுங்கள். மாலை நேரத்தில் காட்டின் மத்தியில் ஓர் நீரோடையின் அருகே யாத்திரிகர்கள் குழு ஒன்று ஒளிரும் நெருப்பு ஜுவாலையைச் சூழ்ந்து அமர்ந்துள்ளது.

படத்திலுள்ள ஒடையில் உள்ள நீர் நெருப்பின்பால் பகைமை பாராட்டுகிறது என நீங்கள் நினைப்பீர்களானால், அஃது எவ்வளவு அபத்தமானது! ஏனெனில், நீரும், நெருப்பும், எண்ணெய், வர்ணம் ஆகியவற்றாலான படைப்புக்களே. அவற்றுக்குக் கீழே நீங்கள் அவையிரண்டுக்கும் பொதுவான துணியையே பார்க்கிறீர்கள். அவ்வர்ணங்களுக்கு அடியில் உள்ள அத்துணி, தூய்மையானது, நிரந்தரமானது, திடமானது. அன்பான நித்ய ஆத்மனே! தெய்வீக ஒளியின் கிரணமே! அனைத்து மனித இனத்தின் ஆன்மீக இதயத்தின் துடிப்பான இந்த இனிமையான, உன்னதமான ஒற்றுமையிலேயே எப்போதும் லயித்திருப்பீர்களாக! இந்த மையப் பொருளை மறந்துவிட்டு, வேறுபட்டுள்ள புறச் சடங்குகளிலும், சம்பிரதாயங்களிலும் மனத்தைச் செலுத்தி, நிஜத்தை விட்டுவிட்டு, நிழலைப் பிடிக்க முயலாதீர்கள். இந்த ஒற்றுமையை உணர்ந்து, எங்கும் இந்த ஒற்றுமையைப் பரப்ப முயன்றீர்களானால், மனித இனத்தின் உறுதிப்பாட்டிற்கு நீங்கள் பேருதவி புரிந்தவர்கள் ஆவீர்கள்.

மனிதனின் உணர்வுகள் எல்லாவற்றுள்ளும், மத உணர்வே வலுவானது. மற்ற உணர்வுகள் எல்லாம் மனிதன் வளர வளர அவனுடன் வளர்கின்றன. ஆனால் மத உணர்வு மனிதன் பிறக்கும்போதே உடன் உள் இணைந்துள்ளது. உள இயல் அடிப்படையில் பரம்பரையாக, பெற்றோரின் மத உணர்வுகள் குழந்தைகளின உள் மனத்தில் புதைந்துள்ளன. எனவே இந்த மத உணர்வு மிக வலுவானது, மிக முக்கியமானது. இவ்வுணர்வினை, பிரிவினை உணர்வின் மூலம் யோசிக்காமல் மாசுபடுத்தும் பெருங்குற்றத்தினைப் பலர் புரிகின்றனர். மனிதனின் அடிமனத்தில் புதைந்துள்ள இந்த ஆன்மீக உணர்வினை அன்பு, ஒற்றுமையென்னும் உணர்வுகள் சேர்ந்து

மெருகேற்றி அமைத்தால் ஏற்படும் இணக்கம், லயம் வேறுபாடுகள் அனைத்தையும் கரைத்து, சச்சரவுகளைத் தீர்த்து வைத்து, கருத்து வேறுபாடுகள் அனைத்தையும் களைந்து, மனித இனத்திற்கு அமைதி, லயம், அன்பான ஒத்துழைப்பு, வளம் என்னும் நாம் தேடிக்கொண்டிருக்கும் இனிமையை அளிக்கும். உலகில் அமைதி, நல்லெண்ணம் இணைந்த இணக்கம் நிறைந்த எதிர்காலம் அமைவது உலக மதங்களிடையே ஒற்றுமை காண நாம் இணைந்து எடுக்கும் முயற்சியைப் பொறுத்துள்ளது.

## ஒற்றுமையே தெய்வீகம்

எனவே, 'எல்லா மதங்களும் ஒன்றே' என்னும் அறிவின் அடிப்படையில் உங்கள் செயல்கள் அமையட்டும். அடிப்படைகள் அனைத்தும் ஒன்றே. அடிப்படையில், எல்லா மதங்களின் அடிப்படையும் ஒன்றே. ஏனெனில், மதங்கள் அனைத்தும் நல்ல குணம், சகிப்புத்தன்மை, மன்னிக்கும் சுபாவம், தீங்கிழையாமை, கருணை, ஈகை, ஆன்மீக ஞான நாட்டம் ஆகியவற்றையே போதிக்கின்றன. நம் பிக்கையுடன் பைபிள், குரான், ஜென்ட் அவஸ்தா, பகவத்கீதை, பாகவதம், உபநிஷத்துக்கள் ஆகிய மறைகளை ஆழ்ந்து படியுங்கள். எப்போதும் மனித இனத்தின் தந்தையான ஆண்டவனையே நினைத்து இருங்கள். எப்போதும் இறைவனின் திருநாமத்தை ஜெபித்து, இறைவனின் மகிமையைப் பாடுங்கள். கர்வத்தையும், அகங்காரத்தையும் நீக்க, இனிமையை வளர்த்துக்கொள்ள, பணிவு, சேவை மனப்பாங்கு ஆகியவை பெற எப்போதும் முயலுங்கள். பரந்த மனப்பாங்கு கொள்ளுங்கள். பிறர் பால் பரிவு காட்டுங்கள். இதயத்தினின்று பேராசை, சுயநலம் ஆகியவற்றை அகற்றுங்கள்.

சுயக்கட்டுப்பாட்டுடன் கூடிய சேவை, பக்தி, ஆன்மீக ஞான வேட்கை, தியானம் ஆகியவை சேர்ந்த வாழ்வினை அமைத்துக்கொள்ளுங்கள். ஆன்மீக ஞானம் பெறப் பாடுபடுங்கள். பேரானந்தமும், அமைதியும் பெறுவீர்களாக! பேரானந்தம் அமைதி ஆகியவற்றைப் புறத்தே பாய்ச்சுங்கள், பாரெங்கும் அமைதி, ஆனந்தம், இணக்கம் நிலைக்க உதவுங்கள்.

இவையெல்லாம் செய்யப்பட்டால், புற வேறு பாடுகளால் மத ஒற்றுமையை அசைக்கவோ, அமைதியை குலைக்கவோ முடியாது என்பது திண்ணம். ஒற்றுமையே தெய்வீகநிலை. மேலோட்டமான புற வேறுபாடுகளை அன்பின் மூலம் வெற்றி கொள்வீர்களாக!

ஆண்டவன் நமக்கு ஆன்மீகப் பார்வை அருள்வாராக! அதன்மூலம் நாம ரூபம் என்னும் திரைக் கப்பால் நம் பார்வை சென்று எங்கும் வியாபித்துள்ள பரம் பெரும் பொருளை நாம் காண்போமாக! அப்பரம்பொருளே அனைவருள்ளும் உறைகிறார், அனைவரின் மூலம் செயல்படுகிறார்.

ஏகோ தேவ ஸர்வ பூதேஷு
கூடா சாக்ஷி சேதா கேவலோ நிர்குணஸ்ச

பரம்பொருளே எல்லா உயிரினங்களிலும் மறைந்துள்ளது. பரம்பொருளே நம்முள் உறையும் நித்யமான சாக்ஷி, நித்ய பரிசுத்த, இரண்டற்ற ஒன்றே ஒன்று என்பதனை நீங்கள் அனைவரும் உணர்வீர்களாக!

ஓம் சாந்தி! ஓம் சாந்தி!! ஓம் சாந்தி!!!

(பம்பாய் வானொலி நிலையத்தின் இசைவுடன் பிரசுரிக்கப்பெற்றுள்ளது.)

## 12. எல்லா மதங்களின் அடிப்படை

மதம், கடவுள், தர்மம், கர்மம், பிரபஞ்சம் இவையனைத்தும் ஆரம்பமற்றவை, நித்யமானவை. இவை பிரிக்கமுடியாதவை. முக்திக்கான வழி அல்லது பிறப்பு இறப்பினின்று விடுதலைக்கான வழியினை மதம் காட்டுகிறது.

தத்துவம், புராணங்கள், ஒழுக்க நெறிகள், சடங்குகள் ஆகியவை மதத்தில் அடங்கியுள்ளன. வேறுபட்ட நிலையில் உள்ள சாதகர்களுக்கான வேறு பட்ட வகையிலான சாதனைகளை மதம் நிர்ணயிக் கிறது.

உண்மையான மதம் ஒன்றே. அது இதயத்தின் மதம். அஃது அன்பின் மதம். அது வேதங்களின் மதம். அது வேதாந்தம், அது மௌனத்தின் மதம். அது நித்ய ஆத்மனில் நிலைபெறும் நித்ய வாழ்வு. உண்மையான மதம் மனத்தைக் கடந்தது. அது புலன்களுக்கும், மனத்திற்கும், அறிவிற்கும் மேலானது. ஒலியும், நிறமும் அற்ற, பகலும், இரவுமற்ற, ஒளியும் இருளும் அற்ற, இன்பமும் துன்பமும் அற்ற, பாவ புண்ணியமற்ற, துரியம் என்னும் தூக்கமற்ற தூக்கம் அது.

மதத்தினுடைய மூலம் கடவுள். அறிவு அனைத் திற்கும் கடவுளே மூலம். உலகின் முக்கிய மதங் களை ஒப்பிட்டுப் பார்த்து ஆராய்ந்தால், பிற்காலத் தில் தோன்றிய மதங்கள் அவற்றுக்கு முன் தோன் றிய மதங்களுடன் தொடர்பு கொண்டிருப்பதை யும் முற்காலத்தில் தோன்றிய மதங்கள் அவற்றுக் கும் முன்தோன்றிய மதங்களுடன் தொடர்பு கொண்டிருப்பதையும் இறுதியில், மிகப் பழங் காலத்தில் தோன்றிய மதம் மனித இனத்துடன்

தொடர்பு கொண்டிருப்பதையும் நம்மால் அறிந்து கொள்ள முடியும்.

மதத்துறையில் புதிய கண்டுபிடிப்பு எதுவும் இருந்ததில்லை. மதத்தின் சாரமான அடிப்படை நெறிகள் இவ்வுலகின் மிகப் பழமையான மனித இனம் தோன்றிய காலத்தவை. கல்ப காலத்தில் அல்லது படைப்புக் கால ஆரம்பத்தில் இந்நெறிகள் இறைவனால் ஞானிகளுக்கும், மகான்களுக்கும் அருளிச் செய்யப்பட்டன. இந்நெறிகள் வேதங்களில் காணப்படுகின்றன. மனித இனத்தின் நூலகத்தின் மிகப்பழமையான நூல்கள் வேதங்கள் கூறும் மறை நூல்கள் என்பது அனைவராலும் ஏற்றுக்கொள்ளப் படும் உண்மையாகும்.

பொருள் உலகில் விஞ்ஞானிகள் விந்தையான புதியனவற்றைக் கண்டுபிடிக்கலாம். ஆனால், கடவுளைப்பற்றி எந்தப் புதிய உண்மையினையும் இனி யாரும் கண்டறியக்கூடிய காலம் வாராது. கடவுளைப் பற்றி இன்னும் தெளிவான அறிவும், கடவுளின் இயல்பு பற்றி இன்னும் ஆழ்ந்த அறிவும் வேண்டுமானால் நமக்கு கிட்டலாம். ஆனால் பிரம்மம் அல்லது கடவுளின் குணத்தைப் பற்றிப் புதிதாக எதனையும் நாம் கண்டறிய முடியாது. ஏனெனில் கடவுள் ஞானம் மனித மனத்தில் தோன்றியதன்று.

மத அறிவும் இத்தகையதே. மதத்துறையில், இதுவரையிலும் உண்மையான புதிய கண்டுபிடிப்பு இருந்ததில்லை. இனிமேல் இருக்கப் போவது மில்லை. புதிய கருத்தை வெளிப்படுத்தி புதிய மதத்தைத் தோற்றுவித்த மதத் தலைவர் எவரும் இல்லை. இம் மதத் தலைவர்கள் அனைவரும் சுயமாக எந்த மதத்தையும் தோற்றுவிக்கவில்லை. அறநெறி களை ஒலி பரப்பியவர்களே! உலகம் தோன்றிய

நாள் தொட்டு முற்றிலும் புதிதான மதங்கள் தோன்றவில்லை. தெய்வீக நிலையிலிருந்து தோன்றியது மதம்.

எல்லா மதங்களின் மூலம் வேதங்களே! வேதங்கள் என்னும் ஊற்றிலிருந்தே சொராஸ்டிரிய மதம், யூத மதம், புத்தமதம், கிறிஸ்துவமதம், இஸ்லாம் மதம் ஆகிய மதங்கள் என்னும் ஆறுகள் பெருக்கெடுத்துப் பாய்ந்தன. எல்லா மதங்களின் பொதுவான நெறிகள் வேதங்களிலிருந்து தோன்றியவையே! எல்லா மதங்களின் சாரமும் வேதங்களில் உள்ளன.

இக்காலத்தில் எல்லா மதங்களும் தெய்வீகமான உண்மைகளையும், மனிதர்களின் தவறுகளையும் கொண்டுள்ளன. எல்லா மதங்களின் அடிப்படை நெறிகளும் ஒன்றே. முக்கியமில்லா சடங்குகளில்தான் வேறுபாடுகள் உள்ளன. எந்த வேதங்களின் உண்மைகளின் அடிப்படையில் இம் மதங்கள் தோற்றுவிக்கப்பட்டுள்ளனவோ; அவ் வேத உண்மைகளைப் பற்றிய தவறான கருத்துக்களும், தவறான விளக்கங்களும்தாம் இவ்வேறுபாடுகளுக்குக் காரணங்கள். எல்லா மத அமைப்புக்களும் சமநிலையில் உண்மையானவையே, தெய்வீகமானவையே.

மக்களுடைய காலவோட்ட பரிணாம வளர்ச்சியின் நிலைகளுக்கேற்ப அவ்வப்போது எழுந்த வெறுப்பு, தவறான முன் அபிப்ராயம், மனஅழுக்கு, அறிவுத் தேக்கம், முரண்பாடான ஆராய்ச்சி ஆகியவற்றின் விளைவாகவே மதங்களிடையே முரண்பட்ட கருத்துக்கள் நிலவுகின்றன.

வரலாற்றுக் காலத்திற்கு முன்பே பெரும்பான்மையான மதங்கள் தோன்றியுள்ளன. எனவே

அம்மதங்களைப் பற்றிய ஆதாரபூர்வமான நூல்களோ, நம்பத் தகுந்த பாரம்பரியமோ இன்று இல்லை,

ஹிந்து மதம், சொராஸ்டிரிய மதம், யூதமதம், புத்தமதம், கிருஸ்துவ மதம், முகம்மதிய மதம் ஆகியவை உலகின் ஆறு பெரிய மதங்கள். ஹிந்து மதம் தனிப்பட்ட எவராலும் தோற்றுவிக்கப்படவில்லை. மற்ற மதங்கள் தனித்தனி மகான்களால் தோற்றுவிக்கப்பட்டவை. அவற்றின் ஸ்தாபகரின் பெயரில் அம்மதங்கள் குறிப்பிடப் பெறுகின்றன. புத்தமதத்தின் இன்னொருவிதமான அமைப்பே ஜைனமதம். சீக்கிய மதம் முக்கியமாக ஹிந்து மதத்தின் அடிப்படையிலும் ஓரளவு இஸ்லாம் மதத்தின் அடிப்படையிலும் அமைந்துள்ளது. ஹிந்து மதம், கிறிஸ்துவ மதம் ஆகியவற்றின் அடிப்படையில் பிரஹ்ம்மோ மதம் பிறந்துள்ளது. இவ்வாறே பல சிறு மதங்கள் தோன்றியுள்ளன.

ஒரு குறிப்பிட்ட மதத்தின் முக்கிய உண்மை அம்மதத்தின் குருக்கள் இனத்தவரின் முரட்டுத்தனத்தால் மறைக்கப்பட்டபோதெல்லாம், அல்லது அம்மதத்தைச் சார்ந்த மக்களால் அம்மதத்தின் முக்கிய உண்மைகள் மறக்கப்பட்டபோதெல்லாம் பெரிய மகான் அல்லது மதத்தலைவர் அவதரித்துள்ளார். அம்மகான் மறைக்கப்பட்ட அம்மத உண்மையை மக்களுக்கு எடுத்துக்காட்டி வலியுறுத்தி அவ்வுண்மையை அதன் பழைய தூய, பிரகாசமான நிலையில் மக்களுக்கு அறிவுறுத்தியுள்ளார்.

இவ்வாறே ஒவ்வொரு புதிய மதமும், பழைய மதத்தின் குறைகளை எதிர்த்து அவற்றைக்களைந்து, பழைய மதத்தைச் சீர்திருத்தும் முயற்சியாகவே தோன்றியுள்ளது.

பழங்காலத்தில் வேத உண்மையான ஒரே கடவுள் என்ற உண்மையினை மக்கள் மறக்கத் தொடங்கியதும், சொராஷ்டர் அவதரித்து, அஹுராமஸ்தா என்னும் ஒரே கடவுளை வழிபட வேண்டும் என்று மக்களுக்குப் போதித்து, தேவர்களை வழிபடுபவரைக் கண்டனம் செய்தார்.

வேத மதம் வெறும் சடங்கு மதமாகக் கீழிறங்கி, மிருகங்களைப் பலியிடும் சடங்குகள் மிகுந்து, சூத்திரர்கள் பிராமணர்களால் வெறுத்து ஒதுக்கப்பட்ட நிலையில், பரிவுமிக்க புத்த பகவான் தோன்றி, மிருகப் பலியைத் தடுத்து நிறுத்தியதுடன், சூத்திரர்களின் நிலையை உயர்த்தினார். யூத மதத் தலைவர்கள் முரட்டு சுபாவத்தினராக மாறிய போது, ஏசு கிறிஸ்து அவதரித்தார். கிறிஸ்துவ மதம் உருவ வழிபாடு, மூட நம்பிக்கை என்னும் நிலைகளில் கீழிறங்கியபோது முகமது நபி அவதரித்து ஒரே தெய்வ வழிபாட்டு முறையைப் போதிக்கத் தொடங்கினார்.

ஹிந்து மதம் மூட நம்பிக்கைள், பொய்யான வழிபாடு, ஆகிய நிலைகளில் தாழ்ந்தபோது, பல்வேறு சீர்திருத்தப் பெரியார்கள் தோன்றி, ஹிந்து மதத்திலிருந்து மூட நம்பிக்கைகள், தவறான கருத்துக்கள், அர்த்தமற்ற சடங்குகள் ஆகியவற்றைக் களைய முற்பட்டனர்.

புத்த மதத்திலும், யூத மதத்திலும் காணப்பட்ட தவறான நம்பிக்கைகளையும், செயல்களையும் நீக்கி, கேவல அத்வைதம் அல்லது முழுமையான ஒரே தெய்வநிலை தத்துவத்தைச் சங்கரர் உலகுக்கு அருளினார். பக்தி நிலையைப் போதித்து, உலக வாழ்க்கையை நடத்திக்கொண்டே மக்கள் பக்தி நெறியில் தோய்வதற்காக இராமானுஜர் அவதரித்தார்.

மக்கள் கொடுமைக்காரர்களாக மாறியபோது, புத்தர் அவதரித்து அஹிம்சை நெறியைப் போதித்தார். மக்கள் கோழைகளாக மாறியபோது குரு கோவிந்தர் தோன்றி, மக்களுக்குத் தைரியம் ஊட்டினுர். தீவிரமான தவ ஒழுக்கத்தில், துறவு நெறியில் மக்கள் சென்றபோது, இராமாநுஜர் அவதரித்து, 'உலகை அனுபவித்துக்கொண்டே உன்னே உணர்வாயாக' என்று போதித்தருளினுர். இவ்வாறே அனைத்துப் பெரிய மதத் தலைவர்களும் மதத் துறையில் சீர்திருத்தவாதிகள், அவர்கள் தோன்றிய கால நிலைக்கும், சமூக வாழ்க்கை நிலைக்கும் ஏற்ப, அக்காலத்தில் இருந்து வந்த மதங்களைச் சீர்திருத்த முயன்றனர்.

இஸ்லாம் மதம் முக்கியமாக யூத மதத்தின் அடிப்படையிலும், ஓரளவுக்கு ஸொராஸ்டிரிய மதத்தின் அடிப்படையிலும் தோற்றுவிக்கப்பட்டது. ஸொராஸ்டிரிய மதத்தின் அடிப்படையில் யூத மதம் தோற்றுவிக்கப்பட்டது.

தேவதைகள் பற்றிய தத்துவத்தை முகமது நபி யூதர்களிடமிருந்து இரவல் பெற்ருர். பல்வேறு தேவதைகளின் பெயர்கள், பதவிகள் ஆகியவற்றை யூதர்கள் பாரசீகரிடமிருந்து கற்றனர்.

ஆத்மா நித்யமானது என்பதில் இஸ்லாம் மதம் முழு நம்பிக்கை கொண்டுள்ளது. இறந்தவர்கள் மீண்டும் எழும் நாள் ஒன்று உண்டு. அன்று இறந்தவர்கள் அவரவர் பாவ புண்ணியங்களுக்கேற்ப சன்மானங்களையோ, தண்டனைகளையோ பெறுகின்றனர் என்று இஸ்லாம் மதம் நம்புகிறது. இக்கருத்து யூத மதத்திலிருந்து ஏற்றுக்கொள்ளப் பட்ட ஒன்று. தீர்ப்பு வழங்கும் நாள் 'பற்றிய நம்பிக்கை யூத மதத்திலிருந்து பெறப்பட்டது'

யூதர்கள் இக்கருத்தை ஸொராஸ்டிரிய மதத்திலிருந்து பெற்றனர்.

நரகத்தின் பாலமான அல்சிராத் பற்றி முகமது நபி குறிப்பிடுகிறார். யூதர்களும் நரகத்தின் பாலம் பற்றிக் குறிப்பிடுகின்றனர். யூதர்களும், முகமதியர்களும் இக்கருத்தை ஸொராஸ்டிரிய மதத்திலிருந்து ஏற்றுக்கொண்டுள்ளனர். இறுதி நாளன்று அனைவரும் புல்சினவாட் என்னும் பாலத்தைக் கடந்து சென்றாக வேண்டும் என்று ஸொராஸ்டிரிய மதம் கூறுகின்றது.

அல்சிராத் பாலத்தைக் கடந்த பிறகு, இறைவன்பால் விசுவாசம் கொண்டிருந்தவர்கள் மோக்ஷ சாம்ராஜ்யத்தை அடைவார்கள். முஸ்லீம்கள் இக்கருத்தை யூத மதத்திலிருந்து ஏற்றுக் கொண்டுள்ளனர். யூதர்கள் இக்கருத்தினை ஸொராஸ்டிரிய மதத்திலிருந்து இரவல் பெற்றனர்.

இஸ்லாமியரின் கடவுட் கருத்து யூதர்களின் கடவுட் கருத்தை அநேகமாக ஒத்துள்ளது. உலகில் கடவுள் என்னும் நல்ல சக்தியும் சாத்தான் என்ற தீய சக்தியும் ஆக இரு சக்திகள் உள்ளன என்னும் இஸ்லாமியரின் தத்துவம் யூதர்களின் தத்துவமாகும். இக் கருத்தினை யூதர்கள் ஸொராஸ்டிரியரிடமிருந்து பெற்றுக்கொண்டுள்ளனர். ஸொராஸ்டிரியர்கள் நல்ல சக்தியை ஸ்பென்டா மெய்ன்யு என்றும் தீய சக்தியை ஆங்கிராமெய்ன்யு என்றும் குறிப்பிடுகின்றனர். ஸொராஸ்டிரியர் இக்கருத்தினை வேதங்களிடமிருந்து பெற்றுக்கொண்டனர். உலகில் நல்லதுக்கும், தீமைக்கும் நடைபெறும் போராட்டத்தினை வேதங்கள் விவரிக்கின்றன.

கிறிஸ்துவ மதத்தின் எல்லாத் தத்துவங்களும் யூத மதத்திலிருந்து பெறப்பட்டவையே. கிறிஸ்துவ மதத்தில் புத்த மதத்தின் கூறும் ஒன்றுள்ளது. கிறிஸ்துவ மதத்தின் ஒழுக்க நெறிப் போதனைகள் புத்த மதத்தின் ஒழுக்க நெறிப் போதனைகளைப் போன்றே உள்ளன. சிரியாவில் பின்பற்றப்பட்டு வந்த புத்த மதமே இயேசுகிறிஸ்து போதித்த கிறிஸ்துவ மதக் கொள்கைக்கு ஆரம்பமாகும். இயேசுகிறிஸ்து அவதரித்த சமயத்தில் பாலஸ்தீனத்தில் புத்தமதம் பரவியிருந்தது. புத்த மதத்திற்கும் கிறிஸ்துவ மதத்திற்கும் ஒரு தொடர்பு இணைப்பு இருந்து வந்தது.

உயர்ந்த ஒழுக்க நெறிப் போதனைகளுக்கு கிறிஸ்துவ மதம் புத்த மதத்திற்குக் கடமைப் பட்டுள்ளது. இயேசுகிறிஸ்து அவதரித்த சமயத்தில் பாலஸ்தீனத்தில் பரவியிருந்த புத்தமதப் போதனைகளின் அடிப்படையிலேயே இயேசுநாதரின் ஒழுக்க நெறிப் போதனைகள் வரையப்பட்டன. கிறிஸ்துவ மதத் தத்துவங்கள் யூதமதத் தத்துவங்களின் அடிப் படையிலும், கிறிஸ்துவ ஒழுக்க நெறிப் போதனைகள் புத்தமத நெறிகளின் அடிப்படையிலும் அமைக்கப் பெற்றன.

ஹிந்து மதத்திலிருந்து நேராகத் தோன்றியது புத்தமதம். ஹிந்து மதத்தின் உண்மையான குழந்தையே புத்தர். புத்தர் உலகை ஆழமாக ஆராய்ந்தார். த்ரிஷ்ணு என்னும் ஆடையை அகற்றுவதற்கும், சுயக் கட்டுப்பாட்டிற்கும், மாந்தர் தம்மைப் பண்படுத்திக் கொள்ளவும் புத்தர் வேறுபட்ட சாதனை முறைகளை அல்லது நாற்பது வகையான கட்டுப்பாட்டு நிலைகளை வகுத்துத்தந்தார். இதுவே புத்த மதத்தின் விசேஷ அம்சமாகும். புத்தர் புதிதாக எதனையும் போதிக்கவில்லை. நற்பண்புகளைக்

கடைப்பிடிக்க வேண்டும் என்று அஷ்டசீல மார்க்கத்தை அவர் போதித்தார். புத்த மதத்தில் மிகச் சிறந்த ஒழுக்க சீல அமைப்பு உள்ளது.

யூத மதம் ஸொராஸ்டிரிய மதத்தின் அடிப்படையில் அமைந்து உள்ளது. அஹுராமஸ்தா என்னும் ஸொராஸ்டிரரின் கடவுட் கருத்து ஜெஹோவா என்னும் யூதர்களின் கடவுட் கருத்தைப்போலவே உள்ளது. கடவுள், சாத்தான் என்ற இரு சக்திகளைப் பற்றிய கருத்தினை யூதர்கள் கொண்டிருந்தனர். தேவதைகள், இறப்பிற்குப்பின் உயிர்த்தெழுதல், நீதி வழங்கும் நாள், மனிதரின் செயல்களின் தரத்தை எடைபோடுதல், இறப்பிற்குப்பின் மறுபிறப்பு, சொர்க்கம், நரகம் ஆகியவற்றில் யூதர்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். நரகத்தைப் பற்றிய குறிப்புக்களில் பாரசீக சமயத்திற்கும், யூத மதத்திற்கும் ஒற்றுமை உள்ளது.

ஸொராஸ்டிரிய மதம் ஹிந்து மதத்தின் அடிப்படையில் உள்ளது. வேதங்களின் கருத்துக்கும் ஜெண்ட் அவஸ்தாவின் கருத்துக்கும் ஒற்றுமை உள்ளது. ஸொராஸ்டிரிய மத தத்துவங்களும், சடங்குகளும் வேதங்களின் தத்துவங்கள், சடங்குகள் ஆகியவற்றுடன் ஒற்றுமை கொண்டுள்ளன. ஸொராஸ்டிரிய மதத்தின் புனித நூல்களில் மறுபிறவித் தத்துவம் சேர்க்கப்பட்டுள்ளது.

ஹிந்துமதம் வேத மதமாகும். எல்லா உண்மைகளையும் இறுதியில் வேதங்களில் காணலாம். வேதங்கள் என்னும் ஊற்று நிலையிலிருந்து ஜெண்ட் அவஸ்தா, பைபிள், குரான் என்னும் கால்வாய்கள் வழியாக மதம் என்னும் ஆறு உலகின்கண் பாய்ந்துள்ளது. எல்லா மதக் கருத்துக்களுக்கும் வேதங்களே உற்பத்தி ஸ்தானம். எல்லா மத ஸ்தாபகர்

களும், மதத்தலைவர்களும் வேதங்களிலிருந்தே உத்வேகம் பெற்றுள்ளனர். வேத ரிஷிகள் மனித இனத்திற்கு ஒளியினையும், அமைதியினையும் அருளியுள்ளனர்.

எல்லா மதங்களும் ஆசியாக் கண்டத்திலேயே தோன்றியுள்ளன. தெற்காசியாவில் ஹிந்துமதம், புத்தமதம், ஜைன மதம், சீக்கிய மதம் என்னும் நான்கு மதங்கள் தோன்றியுள்ளன. கிழக்காசியா அல்லது சீனு கன்பியூஷியஸ் மதத்தையும், டோயிச மதத்தையும் தந்துள்ளது ஜப்பானில் ஷிண்டோ மதம் தோன்றியது. மேற்காசியாவில் ஸொராஸ்டிரிய மதம், யூத மதம், கிறிஸ்துவ மதம், இஸ்லாம் மதம் ஆகியவை தோன்றியுள்ளன.

புத்த மதம், கன்பியூஷியஸ் மதம், டோயிச மதம், ஸொராஸ்டிரிய மதம் ஆகியவை கி. மு. ஆரும் நூற்ருண்டில் தோன்றின. யூத மதம் கி. மு. 13ஆம் நூற்ருண்டில் தோன்றியது. கிறிஸ்துவ மதம் கி. பி. மூன்ரும் ஆண்டிலும், இஸ்லாம் மதம் கி. பி. ஆரும் ஆண்டிலும், சீக்கிய மதம் கி. பி. 15 ஆம் நூற்ருண்டிலும் தோன்றின.

பல்வேறு மதங்கள் எப்போது தோன்றியிருந்தாலும், அவற்றைப் பின்பற்றியவர் எண்ணிக்கை எவ்வளவாக இருந்தாலும், அவற்றைக் கொண்டு ஒரு மதம் மற்ற மதங்களைக் காட்டிலும் உயர்ந்தது என்று கூறுவது அறிவீனம்.

பல்வேறு மதங்களைச் சார்ந்தவர்களின் எண்ணிக்கையைப் பார்ப்போம்.

| | |
|---|---|
| ஹிந்து மதம் | 300,000,000 |
| புத்த மதம் | 520,000,000 |

| | |
|---|---|
| கிறிஸ்துவ மதம் | 500,000,000 |
| யூத மதம் | 16,000,000 |
| இஸ்லாம் மதம் | 300,000,000 |
| ஜைன மதம் | 1,450,000 |
| சீக்கிய மதம் | 5,700,000 |
| ஸொராஸ்டிரிய மதம் | 125,000 |
| ஷிண்டோ மதம் | 17,000,000 |
| கன்பியூஷியஸ் மதம் | 4,000,000,000 |

மதத்தின் அடிப்படை அம்சம் இயக்கம். எம்மதமும் அசையாமல் அப்படியே இருக்க முடியாது. பரிணமம் என்பது இயற்கையின் நியதி — மனிதரின் எண்ணம் எப்போதும் முன்னேற்றப் பாதையில் செல்லக் கூடியது. எனவே பழங்காலத்தில் இருந்து வந்த நம்பிக்கைகள் எண்ணங்கள், மதிப்பீடுகள், உணர்வுகள் ஆகியவையெல்லாம் முன்னேறிவரும் காலத்திற்கேற்ப மாறி மனித இனத்தின் அபிலாஷைகள், இயக்கம் ஆகியவற்றின் உண்மையான வெளிப்பாடாக மதம் மாறி அமைவது அவசியம்.

## 18. மதங்களின் சாரமும், சக்கையும்

மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையே உள்ள இணைப்பே மதமாகும். ஒவ்வொரு மதமும் எப்போதும் மனிதனுக்கும் முடிவில்லாப் பரம் பொருளுக்கும் ஓர் இணைப்பை ஏற்படுத்துகிறது. மிகவும் மோசமான பாவிக்கும்கூட மதம் பாதுகாப்புத் தரவேண்டும். மதம் முழுமையாகச் சகிப்புத்தன்மை கொண்டிருக்கவேண்டும்.

வாழ்க்கை நெறிமுறைகளை மதம் வகுத்துத் தருகிறது. தெய்வீக வாழ்க்கை வாழும் முறையினை மதம் நமக்குப் போதிக்கிறது. நீரும், உரமும் இல்லாமல் மரம் வளர முடியாது. அஃதேபோன்று, மதம் இன்றி மனிதன் ஆன்மீகத் துறையில் வளர முடியாது. உயர்நிலை எய்துவதற்கான செங்குத்தான, குறுகலான ஏணிப் படிகளில் ஏறிச் செல்வதற்கு மதம் நமக்கு உதவி புரிகிறது. ஆன்மாவின் அத்வைத நிலையினையும், அன்பினையும் அறிந்து கொள்வதற்கு உண்மையில் விரும்பும் ஆத்ம சாதகருக்கு மதம் ஒரு முக்கியமான துணை.

சர்வ வியாபியான, நித்யமான, முடிவில்லாத, சர்வ வல்லமை வாய்ந்த, எல்லாம் அறிந்த, பூரணமான, எப்போதும் பரிசுத்தமான கருணை நிரம்பிய, ஆனந்தமயமான, தானே எல்லாமாக இருக்கும் கடவுள் ஒருவர் இருக்கிறார். கடவுளை அறிந்து கொள்வதன் மூலம் நாம் நித்ய நிலையினையும், நித்தியானந்தத்தையும், நிரந்தரமான அமைதியையும் பெறலாம். எல்லா மதங்களும் இதனை ஒருமுகமாக ஏற்றுக்கொள்கின்றன. எல்லா மதங்களின் மிக முக்கியமான அம்சம் இதுவே.

கடவுளை அறிந்துகொள்ள ஒருவர் உண்மையாகவும், பணிவாகவும், தூய்மையாகவும், பரிவு காட்டுபவராகவும், விருப்பு வெறுப்பற்றவராகவும், மன்னிக்கும் இயல்புடையவராகவும், சகிப்புத் தன்மை உடையவராகவும், ஆசையற்றவராகவும், நான், எனது என்னும் அகங்காரமற்றவராகவும், பரந்த மனப்பான்மை உடையவராகவும், தர்ம சிந்தனை உடையவராகவும் இருக்கவேண்டும். எல்லா மதங்களும் இதனை ஒருமுகமாக ஏற்றுக் கொண்டுள்ளன. எல்லா மதங்களின் மிக முக்கியமான அம்சம் இதுவே.

தெய்வீக வாழ்க்கை நடத்துவதற்கு, காமம், பேராசை, கோபம், வெறுப்பு, பொறாமை, சுயநலம், அகங்காரம், குரோதம் ஆகியவற்றை விலக்கி வாழவேண்டும். எல்லா மதங்களும் இதனை ஒருமுகமாக ஏற்றுக்கொள்கின்றன. எல்லா மதங்களின் மிக முக்கிய அம்சம் இதுவே.

அன்பினை வளர்த்துக் கொள்வதன்மூலம் ஆண்டவனை அறிய முடியும். சுயக்கட்டுப்பாடு, தியாக உணர்வு, நன்னடத்தை, மகான்களிடத்தும், கடவுளிடத்தும், பக்தி ஆகியவற்றுடன் ஒழுக்க நெறிகளில் சிறந்து விளங்கினால் கடவுளை உணர முடியும். அறநூல்களை ஆழ்ந்து படிக்க வேண்டும். கடவுளிடத்தும், மத நூல்களிடத்தும், மதத் தலைவர்களின் போதனைகளிலும் ஒருவருக்கு முழுமையான நம்பிக்கை இருக்க வேண்டும். எல்லா மதங்களும் இதனை ஒருமுகமாக ஏற்றுக் கொண்டுள்ளன. எல்லா மதங்களின் மிக முக்கியமான அம்சம் இதுவே.

கடவுளை நேருக்கு நேர் அறிந்துகொள்ள ஒருவர் பிரார்த்தனை புரிய வேண்டும், தியானம் செய்ய வேண்டும். மகான்களுக்கும், ஏழைகளுக்கும், நோயாளிகளுக்கும் ஒருவர் சேவை செய்ய வேண்டும். மகான்களிடம் சத்சங்கம் கொள்ள வேண்டும். ஆடம்பர நிலையைக் கைவிட்டு எளிய வாழ்க்கை வாழ வேண்டும். பொறிகளும், புலன்களும் கட்டுக் கடங்காமல் போகும்போது உபவாசம் இருக்க வேண்டும். புலன்களைக் கட்டுப்படுத்தி தேவைகளைக் குறைத்துக் கொண்டு, மனத்தை அடக்கியாள வேண்டும். எல்லா மதங்களும் இதனை ஒருமுகமாக ஏற்றுக்கொள்கின்றன. எல்லா மதங்களின் மிக முக்கியமான அம்சம் இதுவே.

பர ஸ்திரீகளுடன் தொடர்பு கொள்வது பாவமாகும். பிறர் பொருளைத் திருடுவது பாவமான செயல். பொய் பேசுவது மிக மோசமானது. பிறரை வெறுப்பது தவறு ஆகும். கொலைச் செயல் மாபாதகம். இத்தீய செயல்கள் அனைத்தும் ஒருவரை மிருக நிலைக்குக் கீழிறக்கி, நரகப் படுகுழியில் தள்ளிவிடுவன. எல்லா மதங்களும் இதனை ஒருமுகமாக ஏற்றுக் கொண்டுள்ளன. ஆராய்ச்சி, பாகுபடுத்தும் திறன் ஆகியவற்றால், மதத்திலும், தத்துவத்திலும் சாரம் எது? சக்கை எது? என்று வேறுபடுத்தியறிந்து கொள்ளும் திறன் உங்களுக்கு வேண்டும். அப்போதுதான் உங்களால் மகிழ்ச்சியாக இருக்க முடியும். எல்லா மதங்களின் சாரமும் ஒன்றே. சக்கைகளில்தான் மதங்களிடையே வேறுபாடுகள் காணப்படுகின்றன.

நீங்கள் விரும்பும் வகையில் எவ்வாறு வேண்டுமானாலும் நீங்கள் எளிய உடை அணியலாம். நீங்கள் விரும்பும் எந்த எளிய உணவையும் நீங்கள் உண்ணலாம். நீங்கள் விரும்பும் வகையில் உங்கள் தலை முடியை அமைத்துக் கொள்ளலாம். தியானத்திற்கும் இவற்றுக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை. புலன்களுக்கும், பொறிகளுக்கும், அறிவுக்கும் அப்பாற்பட்டது உண்மையான மதம்.

உடலைப்பற்றிய உணர்வு அகன்ற நிலையில்தான் உண்மையான மதம் ஆரம்பமாகிறது. சாதாரண நடைமுறைகள், பழக்க வழக்கங்கள், சம்பிரதாயங்கள் ஆகியவற்றை ஒருவர் கடந்த நிலையில்தான் உண்மையான மதம் ஆரம்பிக்கிறது. இச் சம்பிரதாயங்கள் யாவும் அர்த்தமற்ற சமுதாயக் கட்டுப்பாடுகள். அகத்தில் விரிந்து வரும் மனிதனுக்கு இவற்றால் ஆக வேண்டியது ஒன்றும் இல்லை.

உங்கள் கருத்துக்களில் குறுகிய நிலைக்கு இடந் தராமல், தாராளமாக இருங்கள். சிறிய விஷயங் களைப் புறக்கணித்து உங்களை எல்லா வகைகளிலும் விரிவுபடுத்திக் கொள்ளுங்கள். சாதாரணமான சடங்குகள், சம்பிரதாயங்கள், தீண்டாமை, சமயக் குறிகள் இவற்றுக்கெல்லாம் மேலே செல் லுங்கள். சக்கையை தூர எறியுங்கள். எல்லா ருடனும் இணைந்து சேருங்கள். அடுத்தவரிட மிருந்து உங்களைத் தனியே பிரித்து வைப்பது எது வானாலும் அதனை உடனே அகற்றுங்கள். அப்போது தான் சமய இணக்கம், தத்துவ இணக்கம், ஆன்ம இணக்கம் ஆகியவற்றை நீங்கள் உணர்ந்து கொள்ள முடியும். அப்போதுதான் உங்களுக்கு ஆனந்தமும், ஞானமும் கிட்டும்.

எல்லா மதங்களின் இலக்ஷியங்களும், தத்து வங்களும் எப்போதும் உயர்ந்தவையே. இத்தத்து வங்களைக் கடைபிடிக்க உண்மையான சிரத்தை வேண்டும். இதுதான் நம்மிடையே இல்லை. புத்த மதக் கொள்கைகளைப் பலர் பிரசாரம் செய்கின்ற னர். ஆனால் ஒருவரும் ஹிம்சையைக் கைவிட்ட பாடில்லை. கிறிஸ்துவ மதப் போதனைகளைப் பலர் பிரசாரம் செய்கின்றனர். ஆனால் அன்பையும், மன்னிக்கும் இயல்பினையும் ஒருவரும் ஏற்றுக் கொண்டபாடில்லை. பலர் இஸ்லாம் சமயக்கொள் கைகளைப் பிரசாரம் செய்கின்றனர். ஆனால் மனி தரின் சகோதரத்துவ உணர்வை ஏற்றுக் கொண்ட வர் இலர். பலர் ஹிந்து மத நெறிகளைப் பிரசாரம் செய்கின்றனர், ஆனால் அனைவருக்கும் உள்ள தெய் வீகத்தை உணர்ந்தவர் இல்லை. எனவே, மதங் களின் காரணமாகவோ, தத்துவங்கள் தேவைப் படுவதாலோ உலகத்தில் கொடுமைகள் நிறைந் திருக்கவில்லை. இம் மதங்களின் இலக்ஷியங்களையும், தத்துவங்களையும் உண்மையாகப் பின்பற்றுவோர்

இல்லாத காரணத்தினுலேயே இவ்வுலகம் கொடுமைக் களமாக உள்ளது. ஒவ்வொருவரும், மிகப் புராதனமான இம்மதக் கொள்கைகளைப் பிறரிடம் பிரசாரம் செய்வதற்குப் பதிலாக, இவற்றைக் கடைப்பிடிக்கத் தொடங்கினுல் உலகிற்கு பெரிய நன்மை செய்தவர் ஆவார். மதக் கொள்கைகளைப் பிரசாரம் செய்வதன் மூலம் செவிகளுக்கு விருந்தளிக்கிறோம். மதக் கொள்கைகளைக் கடைப்பிடிப்பதன் மூலம் மாந்தரின் இதயத்துள்ளே தத்துவங்கள் பதிகின்றன. கொள்கைகளைக் கடைப்பிடிப்பது என்பது மக்களுக்கு வெறுப்பளிக்கின்றது. மதக் கொள்கைகளைப் பிரசாரம் செய்வது மக்களுக்குப் பிழைப்பாகப் போய்விட்டது.

எல்லா மதங்களின் சாரத்தைப் பற்றிய முழு அறிவினையும் பெறுவீர்களாக! எல்லா மதங்களின் சாரத்தையும் சக்கையினையும் பாகுபடுத்தி அறிந்து கொள்ளும் திறனைப் பெறுவீர்களாக! எல்லா மதங்களின் சாரமான ஒற்றுமையினை உணர்ந்து சகிப்புத் தன்மை, மகிழ்ச்சி, ஆனந்தம் நிறைந்த பூரண வாழ்க்கையினை நடத்துவீர்களாக.

## 14. சமயத்தின் ஸர்வ வியாபகம்

உங்கள் அனைவருள்ளும் ஒற்றுமையால் விளையும் மகிழ்ச்சியும், நல்லெண்ணத்தினுல் விளையும் அமைதியும் நிறைந்து நிலவுவதாக!

சம்பவங்கள் நிறைந்த இவ்வுலகில் சூக்ஷ்மநிலை, பிரத்யக்ஷ நிலையால் மறைக்கப்படுகிறது என்பது பொதுவான விதி. உண்மை அல்லது உள்ளுறையும் சாரம் வெளித்தோற்றத்தால் மறைக்கப்படுகிறது. நாமத்தாலும், ரூபத்தாலும் தத்துவம் மறைக்கப்படுகிறது. உள்ளுறையும் சாரத்தை, உண்மையைக்

கண்டறிய, நீங்கள் ஆழ்ந்து பார்ப்பதுடன் பாகு படுத்தி அறிவதையும், பாரபட்சமற்ற விசாரத்தையும் ஒன்ருக இணைக்க வேண்டும். இதில் நீங்கள் தவறினுல், மேலோட்டமான பார்வையே உங்களுக்குக் கிட்டும். நீங்கள் தத்துவத்தைக் காணத் தவறிவிடுவீர்கள். இவ்விதிக்கு மதம் விலக்கன்று. பலரால் உண்மையான தத்துவம் அறிந்து கொள்ளப்படவில்லை. மத தத்துவம்பற்றிய உண்மையான விசாரம் இல்லை. இதன் விளைவாக, உலகை இணைக்கும் பொதுவான அம்சம் மதம் என்ற அதன் உண்மை ஒளியைக் காணுமல், சண்டை, சச்சரவுகளை வளர்த்துப் பிளவுபடுத்தும் காரணம் மதம் என்று தவருகப் புரிந்துகொள்ளப்பட்டுள்ளது. இக்கருத்துக்கு ஆதரவாக முன்னுளைய, இந்நாளைய வரலாற்று நிகழ்ச்சிகளைக் காட்டுவர். மதத்தின் சர்வவியாபக நிலை என்ற கூற்று சிலர்பால் வெறுப்பான புன்னகையைத் தோற்றுவிக்கக் கூடும். இதனைக் கண்டு நான் சிரிக்கிறேன். தீபாவளி வண்ண விளக்கைக் காணும் ஒருவர், உள்ளிருக்கும் தூய ஒளியைக் காணுமல், வெளியே தெரியும் வண்ணக் கண்ணுடியை விளக்கென்று நினைப்பதைப் போன்று, இவர்களும் தவறு செய்கின்றனர்.

## அடிப்படைத் தூண்டுதல்

உண்மையான மதத்தின் இயல்பு அதன் வியாபகத் தன்மையே! இவ்வுண்மையை பாகு படுத்தி அறியும் இயல்பிலாதவரால் அறிய முடியாது. உண்மையான மதம் என்று நான் கூறும்போது மதத்தின் சம்பிரதாயக் கோட்பாடுகளைக் குறிப்பிடவில்லை. மதத்தின் தூய்மையான சாரமான தத்துவங்களையே குறிப்பிடுகிறேன். ஒரு குறிப்பிட்ட மதத்தைப் பின்பற்றுவோர், கடைப் பிடிக்கும் சடங்குகள், சம்பிரதாய நடைமுறைகள்,

நடை உடை பாவனைகள், சமுதாயப் பழக்க வழக்கங்கள், சமயப் புறச் சின்னங்கள் ஆகியவற்றில் சமய வியாபகம் இல்லை. இவையெல்லாம் எப்போதும் மாறக்கூடிய புறத்தோற்றங்களே. ஆனால் ஆழ்ந்த சிந்தனை, விசாரம் ஆகியவற்றின் மூலம் மனித இதயத்தின் அடித்தளமாக விளங்கும் தூண்டலே மதம் என்னும் சரியான உண்மையை அறிந்துகொள்ள முடியும். மத உணர்வு என்பது மனித இனம் முழுவதற்கும் பொதுவானது. ஏனென்றால், நாம் மனிதராக இருப்பதால்தான் இம் மத உணர்வு ஊற்றெடுக்கிறது. அடித்தளத்தில் மதம், மனிதனுள் உள்ள நித்யமான தத்துவத்தை அறிந்துகொள்ள ஒரு தூண்டுதலாக உள்ளது. இத்தத்துவம் எல்லார் இதயத்திலும் துடிப்பாக உள்ளது. எல்லா உயிரினத்தின் மூலம், தோற்றம் ஆகிய முடிவில்லா நிலைக்கான முன்னேற்றம் முதிர்ச்சி காண வேண்டும் என்ற அடிப்படையான தூண்டுதலின் சிறிது வேறுபட்ட நிலைகளே இதுவரை இருந்து வந்தது. இப்போது இருந்துவரும் பல்வேறு மதங்கள், பால் அறிவு, உயிரைப்போற்றிய அறிவு, ஜாதி உணர்வு பெற்றோரைப் பற்றியும் பாரம்பரியத்தையும் பற்றிய அறிவு, மதக் குழுக்கள், அரசியல் கட்சி பற்றிய அறிவு ஆகியவையெல்லாம் மனிதன் வளர்ந்து பெரியவனாகிய பிறகு பிற்காலத்தில் பெறப்படுகின்றன. மனிதனின் புறத்தே உள்ளவற்றைப் பற்றிய அறிவு நிலைமாறும்போது இவையும் மாறுகின்றன. தனி மனிதன் தன் எண்ணங்களை மாற்றிக் கொள்ளும்போது தன் வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்ளும்போது, வாழ்க்கையைப்பற்றிய தன் கருத்தை மாற்றிக் கொள்ளும்போது, இப்புற அறிவுகளும் மாறுகின்றன. ஹிந்து இளைஞன் ஒருவன் கிறிஸ்துவப் பெண்ணைக் காதலித்து மணந்து கொள்கிறான்.

உடனே அவன் கிறிஸ்துவனைப்போல வாழ ஆரம்பிக்கிறான். இந்தோனேஷியப் பெண்மணியொருத்தி ஹிந்து ஒருவனை மணந்துகொண்டு ஹிந்து பெண்மணி போன்றே முற்றிலும் உணர்கிறாள். தாமாகவே அமெரிக்காவில் குடியேறிய ஜப்பானியர் ஒருவர் அமெரிக்கக் குடிமகன் ஆகிறார். சில ஆண்டுகளுக்குப் பிறகு அவர் அவருடைய முன்னைய அரசியல் அறிவினை முற்றிலும் விட்டுவிடுகிறார். மிக உயர்ந்த மனிதரான லியோ டால்ஸ்டாய் தம்மை விவசாயி ஒருவராக மாற்றிக்கொண்டார். உபாதிகள் எனப்படும் இப்புற நிலைகள் சுலபத்தில் கைவிடப்படுகின்றன. ஏனெனில் இவை இவ்வுலகில் பின்னரே பெறப்படுகின்றன. ஆனால் உங்களால் ஆன்மீக அறிவினை இவ்வாறு உதறித்தள்ளி விட முடியாது. ஏனென்றால் இவ்வுணர்வு உங்கள் உள் இயல்பிலிருந்து ஊற்றெடுப்பது. இவ்வுணர்வினைத் தூண்டிப் பரவச் செய்யும் முறையே மதமாகும். பல்வேறு காலங்களில் மனித வரலாற்றில் தெய்வீக உணர்வுபெற்ற மகான்களும், மதத் தலைவர்களும் அவதரித்து, அந்தந்தக் காலத்திற்கு ஏற்றவாறு அந்தந்த மக்களின் தேவைக்கு ஏற்றவாறு ஒரு குறிப்பிட்ட முறையில் மாந்தரின் உள் உறையும் தெய்வீக உணர்வினைத் தூண்டும் முறையினைச் செய்து வந்துள்ளனர். ஆனால், இப்போதும், எப்போதும் எங்கும், மதத்தின் இலக்ஷியமும், மாந்தரின் உள் ஏற்படுத்தும் தெய்வீக மாற்ற முறையும் ஒன்றாகவே இருக்கும்.

## ஒழுக்க மேம்பாடே அடிப்படை

மனிதரின் ஆன்மீக இருப்பிடம் ஆத்மா. இவ்வான்மா ஸத் சித் ஆனந்த நிலை உடையது. அஃது அழிக்க முடியாத அமைதி நிலை.

'' அயம் ஆத்மா சாந்தோ,
சாந்தம், சிவம், சுபம், சுந்தரம், அத்வைதம்''

ஆன்மா என்பது அமைதி நிறைந்தது. மங்களகர மானது, மிகச் சிறந்தது. அழகு, பிரகாசமானது, இரண்டற்றது. இஃதே ஆன்மீக அனுபவத்தின் தன்மை. எனவே உண்மையான மதத்தின்சாரம் ஆன்மாவை இந்நிலையில் உணரச் செய்வது. மனிதனின் இயல்பில் உள்ள தீமைகளைக் களைந்து மனிதனின் இயல்பில் உள்ள நல்ல, புனிதமான அழகான, சோபிதமான நிலைகளை எழச் செய்வதே மதத்தின் வேலையாகும். ஆத்ம சாதகருக்கு நல் வாழ்க்கைக்கான விதி முறைகளை இதற்காக மதம் விதிக்கிறது. எல்லா மதங்களும் சதாசாரத்தின் அடிப்படையில் அமைக்கப் பெற்றுள்ளன. இவ் வுலகில் இதுவரை தோன்றியுள்ள அனைத்து மதங் களும் ஒழுக்க மேம்பாடு என்னும் பூரண நிலை யினையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. ''நல்ல வராக இரு, நல்லதைச் செய், அன்பு காட்டு, தூய்மை பேணு, பிறருக்கு வழங்கு''. இவையே முக்கிய கொள்கைகள். ஆரம்ப நிலையில் நடை முறைக்கேற்ற ஏற்றத்திலேயே முக்கியமான வியாபகத் தன்மை காணப்படுகிறது. அபு - பென் - ஆதம் பற்றிய உன்னதமான குறிப்பு, மனத்தை நெகிழச் செய்யவல்ல ரந்தி தேவரின் கதை, பைபிளில் காணப்படும் நற் பரோபகாரியின் விவர ணம், மன்னர் பிம்பிசாரரின் வேள்வி சடங்கில் கௌதம புத்தரின் உள்ளந்தொடும் காட்சி, இவை யெல்லாம் உண்மையான, அடிப்படையான மத உணர்வினை எடுத்துக்காட்டத் துணைபுரிகின்றன. தெய்வீக சம்பந்தமான தூய்மை, உண்மை, பரிவு, கோபமற்றநிலை, சகோதரத்துவ உணர்வு, சகிப்புத் தன்மை, பணிவு, தன்மறுப்பு, தன்னலமற்ற தியா கம், அனைவரிடமும் அன்பு ஆகியவற்றை வலியுறுத்து

வது நடைமுறை சமய வாழ்க்கை நிலைகளை இணைக்கும் சிறந்த வியாபக நிலையாகும். மிருக இயல்புகளான காமம், புலனின்பம் ஆகியவற்றை வெற்றி கொள்வது, புலன்களைக் கட்டுப்படுத்துவது, பேராசையை அகற்றுவது, குரோதம், பற்று, ஆசை, கர்வம், அகங்காரம் ஆகியவற்றை விலக்குவது ஆகியவை நடைமுறை மதத்தின் முக்கிய அம்சங்கள். இவையும் அனைத்து மதங்களின் ஒரே நெறிகள் வியாபித்திருப்பதற்கு எடுத்துக்காட்டாக உள்ள அம்சங்கள்.

## அகத்தின் வெளிப்பாடு

ஒவ்வோர் உயிருள்ளும் உறைகின்ற, எங்கும் வியாபித்துள்ள ஒரே ஆன்மாவினைப் பற்றிய அறிவினை உண்மையான மதம் தூண்டிவிடுகிறது. மிக உன்னதமான ஆன்ம பரிபாகம் என்னும் பேரானந்தத்தை அறிந்து உன்னதமான பூரண நிலையை எய்துவதே வாழ்வின் பொருளாகும். ஒவ்வொரு மனிதருள்ளும் இந்த மெய்யறிவுக்கான, நித்யானந்தம், அமைதி ஆகியவற்றுக்கான நாட்டம் இயல்பாகவே உள்ளது. இந்நிலையை அடைவதற்கான, இடைவிடாத போராட்டம், நாம் அறிந்தோ, அறியாமலோ நம் வாழ்க்கையின் பிரிக்கமுடியாத அங்கம் ஆகும். இப்பேரானந்த நிலையினை அளிப்பதே மதத்தின் பணி. இவ்வாறாக, அனைத்து மாந்தரினங்களிலும் இந்த இதயத் துடிப்பு இருப்பதும், அனைத்து மாந்தரின் வாழ்வும் இத் தூண்டுதலின் வெளிப்பாடாக இருப்பதும் மதங்களின் சர்வ வியாபகத் தன்மைக்குச் சான்றாகும். அடிப்படையில் உலகின் அனைத்து மதங்களும், இங்கும், இனிமேலும், ஆன்ம பரிபாகம் என்னும் பேரானந்த லயத்திற்கும், நித்ய அமைதிக்கும், மக்களின் சகோதரத்துவத்திற்கும், ஆன்மீக

ஒருமைப் பாட்டிற்கும் ஒரே வழியினையே காட்டு கின்றன என்பதும் ஒரே தத்துவம் எல்லா மதங்க ளிலும் வியாபகமாக பரவியுள்ளது என்பதைக் காட்டுகிறது.

''ஈசா வாஸ்யம் இதம் ஸர்வம்''
''ஸர்வம் ப்ரஹ்ம மயம்''.

என்பது இந்த அனுபவத்தின் வெளிப்பாடு.

எனவே மத உணர்வு என்பது மனித இன முழு வதையும் ஒரே குடும்பம் ஆக்குகிறது. மத உணர்வு என்பது ஆன்மீக ஒருமைப்பாட்டுக்குள் மனித இன முழுவதையும் ஒன்றுகச் சேர்த்து அணைத்துக் கொள் கிறது. இத்தகைய ஒற்றுமை மிக முக்கியமானது, பயன் தரவல்லது, நிலையானது. ஏனென்றால், மதத்தின் மூலம் மனிதர்களை ஆன்மீக நிலையென்னும் ஆழமான நிலையான, முக்கியமான அடித்தளத்தில் நாம் பிணைக்கிறேம்.

இத்தகைய ஆன்மீக அறிவு ஒரு ஹாரத்திலுள்ள பல வண்ணக் கற்களை ஒன்றுக இணைக்கும் தங்க இழை போன்று மனித இன முழுவதினூடே சென்று பிணைக்கிறது. இந்த அடிப்படை உண்மையினை நாம் உணர்ந்துகொண்டால், மனிதரின் புறத்தில் எழும் எந்த வேறுபாட்டாலும், சச்சரவாலும், இந்த இனிய ஆன்மீக லயத்திற்குக் கேடு விளைவிக்க முடியாது என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள். இந்த உண்மையான சாரத்தின் அடிப்படையில் மதத்தினை மக்கள் புரிந்துகொண்டால், கிறிஸ் தவரும், முஸ்லீம்களும், பௌத்தரும், ஜைனரும், பார்சிகளும் தங்களைத் தனித்தனி மதத் தவராகக் கருதிக்கொள்ளாமல், பூரணமான ஆனந்தம் என்னும் இலக்கினை நோக்கி முழுமையான

லயத்துடன் பயணம் செய்யும் ஆன்மீகச் சகோதரர்களாகவே உணருவார்கள். அவர்களுடைய அகத்தின் சாதனை என்னும் இலக்ஷிய ஒருமைப்பாட்டினையும் அவர்களுடைய ஆன்மீக லக்ஷிய ஒருமைப்பாட்டையும் அவர்கள் உணர்வார்கள். மனித இனம் முழுவதையும் அதனுடைய ஒரே மாதிரியான இலக்ஷியம், முயற்சி, இறுதி நிலை ஆகியவற்றை உணரச்செய்வதே மதத்தின் சரியான குறிக்கோள்.

எனவே மதத்தின் குறிக்கோளை உணர்வீர்களாக! மதத்தை அதன் சரியான கோணத்தில் அறிந்துகொள்ளுங்கள். தனது அபிப்பிராயம், சம்பிரதாயங்களின் வலிமை, தத்துவ வாதிகள், மத வெறியர்கள் ஆகியோரின் கருத்துக்கள் உங்களைக் கட்டிப்போட இடங்கொடுத்துவிடாதீர்கள். எனவே, எல்லா உயிர்களுக்கும் பொதுவான இறைவனை மூலமாகக் கொண்டுள்ள இதய பூர்வமான இந்த மதத்தைத் தழுவிடுங்கள். எல்லா மனிதர்களுக்கும் ஒரே மதம்தான். அம்மதம் நித்யமானது, ஸர்வவியாபகமானது. அமைதி, ஒற்றுமை, ஆனந்தம் உங்களுக்குக் கிட்டட்டும். ஒரே கடவுள் நம்மனைவரையும் இருளிலிருந்து ஒளிக்கும், அநித்யத்திலிருந்து நித்ய நிலைக்கும், மாயையிலிருந்து உண்மை நிலைக்கும் இட்டுச் செல்லட்டும்.

## மதத்தின் சர்வ வியாபகம்

மதத்தின் உள்ளுரையும் சாரமான உண்மை அதன் புறத்தோற்றத்தால் மறைக்கப்படுகிறது. உள்ளுரையும் உண்மையை அறிந்து கொள்வதற்கு ஆழ்ந்த நோக்கும், பாரபட்சமற்ற விசாரமும் வேண்டும்.

ஆனால் மதத்தின் நோக்கம் பற்றிய உண்மை யான விசாரம் இப்போது இல்லை. இவ்வாறு, மதம் சரியான முறையில் புரிந்து கொள்ளப்படாமல் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டுள்ளது. மதத்தின் எங்கும் பரவிய நிலை அல்லது சர்வ வியாபகத் தன்மை என்பது மதத்தின் சடங்குகளில் இல்லை. அடிப்படை உண்மைகள் எல்லா மதங்களிலும் ஒன்றாக வியாபித்துள்ளன. மனிதன் ஒவ்வொரு வரின் இதயத்திலும் மதமே அடிப்படையான தூண்டுதலாக உள்ளது.

உண்மையான மதம் எங்கும் வியாபித்துள்ள, எல்லார் உள்ளும் உறைகின்ற பொதுவான ஒரே இறைவன் மூலம் ஒரே ஆன்மா எங்கெனும் பரவி யுள்ளது என்னும் அறிவினைத் தூண்டுகிறது.

பிற மதங்கள்பால் மரியாதையும், சகிப்புத் தன்மையும் இல்லாத மதம் சமுதாயத்திற்குக்கேடு. இக்காலத்தில், ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சார்ந்த வர்களுக்கு மட்டும் தனிச்சலுகைகளுடன் கூடிய ஒரே சார்பு மதத்திற்கு எங்கும் இடம் இல்லை.

## பூரண நிலைக்கான வழி வகைகள்

நம் வாழ்வின் மூலாதாரமான முடிவில்லா இறைநிலை எய்துவதற்கான வளர்ச்சிக்கான அடிப் படை நெறிகளைக் கொண்ட வழிகளே எல்லா மதங்களும். வழிவகைகளில் சிறிது வேறுபாடுகள் இருக்கலாம். ஆன்மீக அறிவினைத் தூண்டி பரவச் செய்யும் முறையே உண்மையான மதம் ஆகும்.

மனிதனுள் உள்ள தீமையைக்களைந்து, கண்ணியமான, நல்ல, மங்களகரமான, அழகான,

நன்மைதரவல்ல இயல்பினனாக மனிதனை மாற்று வதே உண்மையான மதத்தின் பணியாகும். சாத கருக்கு நல்ல வாழ்க்கை நடத்துவதற்கென சில விதிமுறைகளை வகுத்தளிப்பதன் மூலம் மதம் இப் பணியினைச் செய்கிறது.

உலகம் இதுவரை அறிந்த வரையில், ஒழுக்க மேம்பாடும் ஒழுக்கத்தில் பூரண நிலையும் ஒவ்வொரு மதத்தின் அடிப்படை நெறியின் சர்வ வியாபகத் தன்மைக்குக் காரணமாக உள்ளது.

மதத்தின் மறுபெயர் தன்னைப் பண்படுத்திக் கொள்ளல் என்று கூறலாம். மிருக உணர்வுகளை வெற்றி கொள்வதும், புலன்களையும் பொறிகளையும் கட்டுப்படுத்துவதும் சமய வாழ்வின் முக்கியமான அம்சங்களாவன.

சுயநலம் குறைந்து, அகங்காரம் குறைந்து சகிப்புத்தன்மை மிகுந்து, பணிவுமிகுந்து, பரந்த நோக்கு மிகுந்து, தன் விசாரம் கொண்டு வாழு வதே சமய வாழ்வாகும். சாதாரண மனிதனுக் குள்ளதைக் காட்டிலும், சமய வாழ்வு வாழ் வோருக்கு பேராசை, காமம் போன்ற உணர்ச்சி களின் மீது கட்டுப்பாடு மிகுந்திருக்கும்.

## குருடராக இருக்காதீர்கள்

சர்வவியாபகமான மதத்தைப் பரப்புதல் என்னும் நோக்குடன் அமையும் பரவலான பொதுக் கல்வி முறையே மத ஒற்றுமையையும் முன்னேற்ற மான சமுதாய வாழ்வினையும் ஏற்படுத்தவல்லது.

மதத்தைப் பற்றிய சரியான நோக்கு, உலக ஒற்றுமைக்கும், சமாதானத்திற்கும், பொதுவான லக்ஷிய வியாபகத்துடன், ஆன்ம பரிபாகத்திற்கான

பொதுவான முயற்சி, நிறைவேற்றம் ஆகியவற்றின்மூலம் வழிவகுக்கும். மதத்திற்குத் தனித்தன்மை வேண்டியதுதான், ஆனால் அத்தனித்தன்மை வேற்றுமையை உண்டாக்குவதாக இருக்கக்கூடாது.

இவ்வுலகின் லௌகீக சக்தி எதனாலும் மனிதனுள் உள்ள மத சட்டத்தை அழித்துவிட முடியாது. இத்தகைய சக்தி சிறிது காலத்திற்கு வேண்டுமானால் மத நாட்டத்திற்குத் தடையாக இருந்து திசை திருப்பலாம்.

அரசாங்கம் ஒரு குறிப்பிட்ட மதத்தைப் பரப்ப வேண்டியதில்லை. எங்கும், எப்போதும் தேவையான மத உண்மைகளைக் கல்விப் பாடத்திட்டத்தில் அரசாங்கம் சேர்த்தால் போதுமானது.

சொந்த விருப்பு வெறுப்புக்கள், சம்பிரதாய வலிமை, மத வெறியர்களின் கருத்துக்கள் ஆகியவை உங்கள் பார்வையை மறைக்காமல் இருக்கட்டும். உண்மையான போதனை பெறாத மக்கள் கூட்டத்தின் சம்பிரதாயங்களைக் கண்டு மதத்தைப் பற்றித் தவறான அபிப்பிராயம் கொண்டுவிடாதீர்கள்.

மதத்தையும், அரசியலையும் கலக்காதீர்கள். ஒன்று மற்றதை அழிக்க முயல வேண்டாம். மதம் உங்கள் சொந்த விஷயம். அடக்க முடியாத உறுதிமொழிகளை நம்பிவிடாதீர்கள். உங்களால் முடிந்த வரையில் மதக் கோட்பாடுகளைக் கடைப்பிடியுங்கள். நிகழ் காலத்தில் வாழுங்கள். ஒவ்வொரு நாளையும் நல்ல முறையில் வாழ்ந்து காட்டுங்கள்.

---

அத்தியாயம் மூன்று

## சமய இணக்கம் பற்றிய கவிதைகள்

### 15. சமய இணக்கம்.

மதமே வாழ்வின் அடிப்படை
மாந்தரின் அனைத்து உயரிய முயற்சிகளுக்கும்
அஃதே அடிப்படை
அனைத்து மதங்களின் அடிப்படையான
அழுத்தமான ஒற்றுமையை உணர்ந்து
கொள்ளுங்கள்
கண்ணுக்குத் தோன்றும் வேறு பாடுகளுக்கடியில்
இவ்வொற்றுமை இழையாகச் செல்கிறது
மூடநம்பிக்கைகளை மூலையில் தூர எறியுங்கள்!
இந்த இனிய ஒற்றுமையை உணரும்
பயிற்சிக்கான வழி முறைகளை நாடுங்கள்
சர்வ மத மகா சபைகளைக் கூட்டுங்கள்
ஒரே மேடையில் பலப்பல மதத் தலைவர்களை
ஒன்றுகக் கொணருங்கள்.
பொதுவான பிரார்த்தனைக்கு முனையுங்கள்
நடை முறை மதத்தை நாடுங்கள்
ஆன்மீகப் புனர் ஜென்மம், அமைதி,
லயம், ஒற்றுமை ஆகியவற்றைக்
கொண்டு வாருங்கள்.

### 16. ஒரே ஜாதி, ஒரே மதம், ஒரே இறைவன்

ஜாதி ஒன்றொழிய வேறில்லை!
மனித ஜாதி தான் அது!
மதமும் ஒன்றன்றிப் பலவில்லை!
அன்பு மதம் அல்லது வேதாந்த மதமே அது!
தர்மமும் ஒன்றே
சத்திய மெனும் தர்மமே அது!

இருப்பதெல்லாம் ஒரே விதியே!
காரண, காரிய விதியே அது.
அனைத்துலகிற்கும் ஆண்டவன் ஒருவனே
அவன் சர்வவியாபி, சர்வவல்லமை வாய்ந்தவன்
சர்வமும் அறிந்தவன்!
மனித இனத்திற்கு இருப்பது ஒரே மொழியே
மௌன மொழி அல்லது இதய மொழியே அது.

## 17. மதத்தின் சாரம்

நமக்கு மேலே ஒருவன்
அவன் எங்கும் நிறைந்தவன், எல்லாம்
அறிந்தவன்,
சர்வ வல்லமை வாய்ந்தவன்
நித்யமானவன், ஞான ரூபன், பூரண
ஆனந்தமயமானவன்
அனைவருள்ளும் அழுத்தமாக இருப்பவன் அவன்.
நிலைத்த இன்பத்தை அளிப்பவன் அவனே!
அமரவாழ்வும் அமைதியும் அவனால்தான் கிட்டும்.
உங்களை உணர்ந்து, சிக்கெனப் பிடியுங்கள் அவனை.
இதயத் தூய்மை, நம்பிக்கை, பக்தி
இடை விடாத் தியானம்
இருப்பதை வழங்கும் இயல்பு
அன்பு காட்டி, அரவணைத்து அனைவர்க்கும்
பணியாற்றும் பாங்கு இவற்றால்
இறைவன் எங்கும் நிறைந்திருப்பதை
இயல்பாய் உணருங்கள்.
அனைத்து மதங்களின் முக்கிய சாரம் இவையே!

## 18. உண்மையான மதம்

விருப்பு வெறுப்புக்களை,
அகங்காரத்தை அறவே அகற்றுங்கள்.
காமம், கர்வம், கோபம் காணாமல் போகட்டும்!

தெய்வீகப் பண்புகளை உங்கள்
நெஞ்ச வயலில் பாத்தி கட்டி வளர்த்திடுங்கள்.
களையென அரக்க இயல்புகளை அகற்றிடுங்கள்.
புலன்களையும், மனத்தையும் கட்டிப்போடுங்கள்.
'நான்' என்னும் உணர்வினையும், ஆசைகளையும்,
ஏக்கங்களையும் அழித்திடுங்கள்.
அழுத்தமாக ஆண்டவனை நம்புங்கள்.
மகான்களின் வாக்குகளை மறைநூல்களின்
தத்துவங்களை மனத்தினுள் போற்றிடுங்கள்!
அஹிம்சை, உண்மை, பிரம்மச்சரியம்
உங்கள் இலக்காக இருக்கட்டும்!
"நான் யார்?" என்னும் விசாரத்தில் ஆழ்ந்திருங்கள்
உணர்ந்திருங்கள் உண்மையினை,
பெற்றிடுங்கள் முழு விடுதலை
உண்மையான மதம் இதுவே!

## 19. ஒரே சாரம்

### 1

நாம ரூபங்களுக்கப்பால்
நாமமும் ரூபமும் இல்லா நாயகன் இருப்பான்!
ஆட்சியாளர் அனைவருக்கும் அப்பால்
ஆள்பவரை எல்லாம் கண்டிடும்
ஆண்டவன் இருப்பான்!
ஒளிக் கீறல்களுக்கப்பால்
பேரொளியாக, ஒளிகளுக் கெல்லாம் ஒரே
ஒளியாக ஒளிர்பவன் அவனே!
சப்தங்களுக் கெல்லாம் அப்பால்
சப்தமில்லாத மோன நிலையில் இருப்பவன்
அவனே.
ஆச்சாரியர்கள் அனைவருக்கும் அப்பால்
குருக்கள் அனைவர்க்கும் குருவாய் இருப்பான்
குருநாதன்!
நீயே அவன்! தத்வம் அஸி! ஓ ராமனே!

**2**

அகிலத்தின் அநித்தியவஸ்துக்களுக்கப்பால்
நித்தியமாய் இருக்கும் பூரணன் அவனே!
இவ்வுலகின் இயக்கங்கள் அனைத்திற்கும் அப்பால்
முடிவில்லாது சலனமற்று இருப்பவன் அவனே.
அவனுக்கு அப்பால்
நாழிகையேது? நாள் ஏது?
காலம் கடந்த நித்தியன் அவன்!
வெறுப்பு, கலகம், போர் இவற்றுக்கப்பால்
மறைந்திருக்கும் அன்பே அவன்!
நீயே அவன்! தத்வம் அஸி! ஓ ராமனே!

## 20. மதத்தின் சாரம்

சகிப்புத் தன்மை, ஆன்மீக உணர்வு
இவையே மதத்தின் சாரம்.
மழிக்கவும் வேண்டாம், நீட்டவும் வேண்டாம்,
வெண்ணீறோ திருமண்ணோ வேண்டாம்,
காவியாடை வேண்டாம், கமண்டலம் வேண்டாம்,
மணியோசை, சங்கநாதம் வேண்டாம்,
ஜப மாலை வேண்டாம்,
வெயிலிலும், கடுங்குளிரிலும் தவம்புரிதல்
வேண்டாம்.
லௌகீக ஆசைகளுக்கும், தூண்டுதல்களுக்கும்
மத்தியில்
மனத்தூய்மை, பிறருக்கு தன்னைமறந்த சேவை
எண்ணம், வாக்கு, செயல் ஆகியவற்றில்
பரிசுத்த நிலையே வேண்டும்!

## 21. உண்மையான மதம்

தியாக உணர்வுடன்
அனைவர் பாலும் நட்புக் காட்டி,
தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளாமல்,
உண்மை பேசி,
தன்னுள்ளே ஒளிவிடும்
ஆத்மனைத் தியானித்து,
நல்லவராய் இருந்து அனைவர்க்கும்
நல்லதே செய்து, அவர்களை
மகிழ்வுறச் செய்து,
நோயாளிகளை, இயலாதவர்களை ரக்ஷித்து,
ஏழைகளுக்கு இயல்பாய்ப் பணிபுரிந்து
வாழும் நிலையே உண்மை மதம்!
புறச் சடங்குகளை முறையாகக்
கடைப் பிடித்து வாழ்வதன்று உண்மையான
மதம்.
மறை நூல்கள் பற்றிய தர்க்க வாதமும் அன்று
உணர்ந்து, பரப்பிரம்மம் ஆவதே உண்மை மதம்.
எல்லாச் சூழ்நிலைகளிலும் சமநோக்கும்
சலனமற்ற மன நிலையும் கொண்டிருப்பவரே
உண்மையான மதவாதி!

## 22. எல்லா மதங்களின் சாரமும் ஒன்றே

சக்கையில் தான் வேறுபாடு,
சாரத்திலே சகல மதங்களும் ஒன்றே!
புத்த மதம் போதிக்கும் அஷ்ட சீலம்
சதாசாரத்தை சரத்தை நிகர்த்தது,
சதாச்சரம் என்பது ஹிந்து மதம்
வகுத்தளித்துள்ள
நேர்மை வழியிலக்கணம்!
கிறிஸ்துவத்தின் குன்றின் மீதான உபதேசம்,
பௌத்தத்தின் அஷ்ட சீலத்தை நிகர்த்தது!

எனவே அதுவும் சதாத்சார வழியினது!
இவை யெல்லாம் ஒழுக்க நிலையில் பூரணத்தை
இலக்காகக் கொண்டவை!

''நமக்கு மேலே ஒருவன்
அவனே நமக்கு அமைதி அருள்பவன்.
அவனே நமக்கு நித்ய ஆனந்தம், பூரண விடுதலை,
முழுமைநிலை, அமரவாழ்வு அருள வல்லவன்.
பிறர் உணர்வினைப் புண்படுத்த வேண்டாம்.
உண்மையே பேசுங்கள்
உயிருள்ள எதனையும் கொல்லாதீர்கள்.
பணிவு, தைரியம், மன்னிக்கும் இயல்பு,
சகிப்புத் தன்மை, பரிவு ஆகிய தெய்வீகப் பண்புகளை
பேணி வளர்த்திடுங்கள்!
அனைவரையும் அன்புடனே அரவணையுங்கள்
நல்லவராக இருந்து, இருப்பதை வழங்கிடுங்கள்.
இதயத்தைச் சுத்தி செய்யுங்கள்.
மனித இனத்திற்கு இதமான சேவை புரிந்திடுங்கள்.
உங்களைப் போலவே பிறரையும் எண்ணிடுங்கள்.
சகோதர உணர்வினைப் பேணி வளர்த்திடுங்கள்.
மனிதரையும் மனிதரையும் பிரித்து வைக்கும்
தடைகளை
எல்லாம் தகர்த்திடுங்கள்!!
அனைத்து மதங்களின் சாரம் இவையே!!

## 23. உலக மதம்

எல்லா மதங்களும் ஒன்றே. மதத்திற்கு ஆயிரம் வாயில்கள். கடவுளை அடையும் வழியைக் காட்டுவது மதம், மதத்தின் தோற்றுவாய் கடவுள். ஓ, மானுடா! சண்டை ஏன்? வாதப் பிரதிவாதம் ஏன்? மதத்தைப் பயின்று அதன்படி நட. மதத்தின் இலட்சியத்தை அடை. பிரம்மம், அல்லா, ஜெஹோவா, அஹுர் மஸ்தா அனைவரும் ஒருவரே.

உண்மை ஒன்றே! ஞானிகள் அதற்கு இட்ட பெயர்கள் பலப்பல. பலப்பல காலங்களில் மகான்கள் தோன்றி உண்மையின் ஒன்ருன இயல்புதனை அழுத்தமாக உபதேசித்துச் சென்றுள்ளனர். அவர்கள் அனைவரின் உபதேசங்களும் அடிப்படையில் ஒன்றே. அக்ஞானம் கூறுபோடுகிறது. எல்லா மதங்களையும் இயல்புடனே சமமாகப் பாருங்கள், அனைத்து மதத் தலைவர்களையும் வணங்கிடுங்கள். உண்மை ஒன்றே உணர்ந்திடுங்கள் இதனை.

## 24. ராமும் ரஹீமும்

ராமும் ரஹீமும் எனக்கு ஒருவரே!
கிருஷ்ணனும் கரீமும் எனக்கு ஒருவரே!
பகவானும் அல்லாவும் எனக்கு ஒருவரே!
அஹீர் மஸ்டாவும் ஜெஹோவாவும் எனக்கு
ஒருவரே!
கிறிஸ்துவும் கிருஷ்ணனும் எனக்கு ஒருவரே!
அனைத்து மகான்களும் மதாசாரியர்களும்
என் வணக்கத்திற்குரியவரே
அனைத்து மதங்களில் நான் காண்பது
ஒரே உண்மையினையே!

## 25. சர்வ சமயப் பாடல்

### I மதம் என்றால் என்ன?

அமைதி, சகோதரநிலை ஆகியவற்றுக்கான
அருமை வழி மதம்!
கடவுளை அறியக் கருவியாய் விளங்குவது மதமே!
மனிதனையும் இறைவனையும் பிணைப்பது மதமே!
குணத்தினை மாற்றவல்ல ரஸவாதத் திறமை
மதத்திற்கே உண்டு.
பயிலப் பயில மதத்தைப் புரிந்துகொள்ள முடியும்.

மதமின்றி ஒழுக்கமேது? ஆன்மீகம் ஏது?
மதமற்ற வாழ்க்கை வீண், அது மரணமன்றி
வேறில்லை
மதமற்ற கல்வி கல்வியே இல்லை !

## II ஒரே மதம்

உலகில் உள்ளது ஒரே மதமே!
அஃது அன்பெனும் மதமே!
அஃது இதயத்தில் ஊறுவது!
அது வேதாந்த மதம்!
அஃது ஒற்றுமை, ஒரு நிலை யென்னும்
உன்னத மதமே!

## III உண்மையான மதம்

உண்மை மதம் மனம், புலன்களைக் கடந்தது
அஃது ஆன்மாவை அறியச் செய்வது
அது தெய்வீக அனுபவம்
அஃது அன்பு, ஒற்றுமை
என்னும் உயர் மதம் !

## IV வேற்றுமையில் ஒற்றுமை

பிரம்மம், அல்லா, கிருஷ்ணர், கௌடா,
அஹீர் மஸ்டா, ஜெஹோவா, டாவோ,
புத்தர், ஸொராஸ்டிரர்,
இயேசுநாதர், மஹாவீரர், கன்பியூஷியஸ்
அனைவரும் அடிப்படையில் ஒருவர் !
ஏகம் சத்விப்ர பஹுதா வதாந்தி
உண்மை ஒன்றே, பலப்பல பெயர்களில்
ஞானிகள் அதனை அழைக்கின்றனர் !

## V சர்வ சமயப்போதனை

அனைத்து மதங்களின் அடிப்படையும் ஒன்றே
சேவை செய்யுங்கள், அன்பு காட்டுங்கள்,
இருப்பதை வழங்குங்கள், இதயச் சுத்தி
செய்யுங்கள்.

தியானம் பயிலுங்கள், ஆன்மாவை
உணர்ந்திடுங்கள்.

நல்லவராயிருந்து நல்லன செய்யுங்கள்.
பரிவு காட்டுங்கள், அனைவரையும் அரவணையுங்கள்.
"'நான் யார்?'' என்னும் ஆன்ம விசாரத்தில்
ஆழ்ந்திடுங்கள்.

ஆன்மாவினை அறிந்து தளையினை அறுத்தெறியுங்கள்.
மனத்தினை ஒருநிலைப் படுத்தி, தியானம்
பயிலுங்கள்.

ஆன்மீக பரிபாகம் அடைந்திடுங்கள்,
அனைத்து மதங்களின் அடிப்படை இவையே!
சடங்குகள், சம்பிரதாயங்கள் வெறும் சக்கைகள்.
சக்கைகள் குறித்துச் சண்டையிடாதீர்கள்.
பிரார்த்தனை, உபவாசம், தானம்,
புனித யாத்திரை இவையே அனைத்து மத
நுழை வாயிலின் முதற்படிகள்.
சகிப்புத் தன்மை, பரந்த மனப்பான்மை,
அனைத்து மத மகான்களிடம் மரியாதை
பேணிடுங்கள்!
மகான்கள் அனைவரும் சொல்வது
ஒரே உண்மையினையே!

## அத்தியாயம் நான்கு

## சமய ஒப்பீடு

### 26. மதங்களின் மகா வாக்கியங்கள்

பொருளும், இலக்ஷியமும் கொண்ட உன்னதமான, மகத்தான ஒன்று வாழ்க்கை. வாழ்க்கை அழுத்தமான தத்துவத்தையும், உயரிய இலக்ஷிய நிலையும் கொண்டது. நித்தியமான உண்மை என்னும் நன்னிலையாம் மேடைமீது நடிக்கப்பெறும் அழகான அமர நாட்டியமே வாழ்க்கை! தானே ஒளி வீசும் ஒளிப் பிழம்பு வாழ்க்கை, தானே முழுதாக உள்ள பூரண நிலை. உண்மையின் ஆட்சி, தானே ஆனந்தமயமான நிலை. வாழ்க்கை என்பதைக் குறித்து அறிந்து பேசுவது அறிவு. லௌகீக உலகின் எதனாலும், நம்முடைய பொறிகளாலும் இந்த உண்மையை நிரூபிக்க முடியாது. உள்ளிருக்கும் இதயத்தின் காட்சியாலேயே இதனை உணர்ந்தறிய முடியும்.

தனிமனிதர் வாழ்வின் அடிப்படை இயல்பு யாதெனில் முடிவில்லா அகண்ட நிலையில் விரிவடைவது, அனைவரின் இதயத்திலும் அமர்ந்திருக்கும் முயற்சி, அனைவரின் வாழ்க்கையும் ஆள்வது, உள்ளிருந்து இப்பிரபஞ்சத்தையே ஆள்வது, பூரணமான ஆற்றலையும், ஆனந்தத்தையும் பரவிடச் செய்வது.

ஆண்டவனின் நித்தியமான இதய ஒலிக்கேற்ப நடனமாடுவது, உண்மை என்னும் பேரொளியில் ஒன்றிப்போவது, இவ்வகையில் பூரணநிலை எய்துவது, தெய்வீக வாழ்வு நடாத்துவது, கடவுள் வாழ்க்கை காண்பது, நித்திய இளமை, அழிவில்லாப்

பொழிவு, முடிவில்லா ஞானம், அமைதி என்னும் அகண்டத்தில் வளைய வருவது ஆகியவையே வாழ்வின் இலக்ஷியம்.

வாழ்க்கையின் ஒவ்வோர் அங்கமும் கவிதை. ஒவ்வோர் அம்சமும் உண்மையெனும் நித்திய ஒளியில் பிரகாசிக்கிறது. வாழ்க்கையில் வீசும் ஒவ்வொரு புயலும், ஏற்படும் ஒவ்வொரு மன அழுத்தமும் ஆன்மீக மகிமை என்னும் பெருமை கொண்டது. உலகின் வஸ்துக்கள் அனைத்தின் தோற்றத்திற்கும், அழிவிற்கும் ஊற்றான ஆண்டவனைப் பற்றிய ஞானம் என்னும் துடிப்பு இவ்வுலகை இயக்கி வருகிறது. எங்கும் வியாபித்துள்ள கடவுளின் தத்துவத்துடன் ஒன்றி வாழ்வதே மாந்தரின் கடமை.

எல்லா உயிரினங்கள் உள்ளும் இழைத்து செல்லும் தத்துவம் அனைவருள்ளும் மறைந்துள்ள உயரிய ஆன்மீக ஞானமே. வேறுபாடே இல்லா ஒரே ஒற்றுமை இது. எங்கும் வியாபித்துள்ள ஒரே சத்தான இவ் இறைவனை உணர்ந்தறிவதற்கென எல்லா மதங்களின் மகான்களும், மகா வாக்கியங்கள் என்னும் பேரொளி பாய்ச்சியுள்ளனர். இம் மகா வாக்கியங்கள் அவர்களுடைய ஆன்மீக அனுபவங்களின் வெளிப்பாடுகள். உலகிற்குத் தேவையான ஆன்மீக ஞானம் என்னும் சாரத்தினைக் கொண்டவை. ஒன்றுடன் ஒன்று ஒப்பிட்டுப் பார்த்து இம்மகாவாக்கியங்களைத் தியானம் செய்யவேண்டும் என்பதற்காக ஒரு சில மஹா வாக்கியங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

புத்த மதம் : புத்தம் சரணம் கச்சாமி
தர்மம் சரணம் கச்சாமி
சங்கம் சரணம் கச்சாமி

| | | |
|---|---|---|
| கிறிஸ்துவ மதம் | : | ''நானும் என்னுடைய தந்தையும் ஒருவரே''. |
| கன்பியூஷியமதம் | : | தீமையைக் காணுதிருத்தல், தீமை குறித்துக் கேளாது இருத்தல், தீமையேதும் செய்யாதிருத்தல் ஆகிய இம்மூன்றுமே வாழ்வின் இரகசியங்கள். |
| ஹிந்து மதம் | : | தத்வம் அஸி-நீயே அது. |
| ஜைன மதம் | : | அஹிம்சா பரமோ தர்மா அஹிம்சையே மிக உயரியமதம். |
| யூத மதம் | : | சலனமற்று அமைதியாக இருந்து, நானே இறைவன் என்பதை அறிந்துகொள்ளுங்கள். |
| இஸ்லாம் | : | லா இல்லாஹி இல்லாஹீ முகமத் ரஸூல்லா ஹி<br><br>அல்லாவைத் தவிர, ஆண்டவன் வேறொருவரும் இல்லை. முகமதுவே அல்லாவின் திருத்தூதர். |
| சீக்கிய மதம் | : | ஏக் ஓம்கார் சத்னம்<br>ஒரே கடவுளே உள்ளார்<br>அவருடைய நாமமே உண்மை. |
| சூஃபி மதம் | : | 'அனல்ஹக் 'நானே கடவுள்'. |
| ஷின்டோ மதம் | : | தெய்வத்தின் அருளை வேண்டிப் பெறுவதற்குப் பிரார்த்தனையே முக்கியமாக தேவைப்படுவது ஆகும். |

டோயிசம் : எங்கும் டாவோ நிறைந்துள்ளது. அது மதிப்பற்ற பொக்கிஷம். அதுவே காவலர், ரக்ஷகர். எல்லா உயிரினங்களும் பாதுகாப்புத் தேடும் சரணாலயம் அது.

ஸொராஷ்டிரிய மதம்: ஆண்டவன் ஒருவரே!

ஹூம்தா, ஹூக்தா, ஹாவரெஸ்டா, மான்ஸ்னி, கவாஸ்னி, குனர்ஸ்னி—தூய எண்ணம், தூய வார்த்தைகள், தூய செயல்கள் என்று பலப்பல பெயர்களை மனிதன் கடவுளுக்குக் கொடுத்துள்ளான்.

அனைத்து மதங்களின் மையக் கருத்தான உண்மையை இம்மகாவாக்கியங்கள் சுருக்கி கூறுகின்றன. பூரண நிலைக்கான பாதைகளை இம்மகாவாக்கியங்கள் காட்டுகின்றன. இம்மகாவாக்கியங்கள் ஆன்மீக சாதனைகள், ஞானம் எனும் இலக்கினைக் காட்டுகின்றன. வாழ்வின் ஒற்றுமையைக் காட்டுகின்றன. உண்மையின் அடிப்படையில் ஆன்மீக ஒற்றுமையைக் காட்டுகின்றன. ஆன்மா மாற்றங்களைக் கடந்தது. மனிதரையும் கடந்தது, எங்கும் வியாபகம் கொண்டது.

ஆன்மா பூரணநிலை எய்துதற்கான திறவுகோல்கள் இம்மகாவாக்கியங்கள். ஆன்மாவின் உண்மை நிலையினை காட்டுபவை. இம்மகாவாக்கியங்களில் ஏதேனும் ஒன்றினைத் தொடர்ந்து பாராயணம் செய்வதன் மூலம் நம் உள்ளே இருக்கும் ஆன்மீக அறிவினைத் தூண்டிவிடும். இம்மகாவாக்கியங்களை ஆழ்ந்து தியானம் செய்வதன் மூலம் பரிபூரணமான உண்மையை அறிந்து கொள்ளலாம்.

## 27. கடமையின் சாரம்

ஹிந்து மதம் : உனக்கு பிறர் எதனைச் செய்தால் நீ விரும்பமாட்டாயோ, அதனை நீ பிறருக்குச் செய்யாதே! இதுவே கடமையின் சாரம்.

புத்த மதம் : உனக்கு தவறு என்று எதனை நினைக்கிறாயோ, அதனை பிறருக்குச் செய்யாதே! உனக்கு எது மகிழ்ச்சியென நினைக்கிறாயோ அதனைப் பிறருக்குச் செய்.

கிறிஸ்துவ மதம் : மற்றவர் உனக்கு என்ன செய்ய வேண்டும் என்று நீ நினைக்கிறாயோ, அதனையே மற்றவருக்கு நீ செய். இதுவே விதி.

இஸ்லாம் : தன்னைப் போலப் பிறரை விரும்பாதவன் ஆண்டவனை நம்பாதவன்.

சொராஷ்டிரிய மதம் : தனக்கு நல்லது இல்லாததைப் பிறருக்கு செய்யாத இயல்பே நல்ல இயல்பு.

டோயிசம் : ''பிறர் துன்பம் உன் துன்பம். பிறர் மகிழ்ச்சி உன் மகிழ்ச்சி'' என்று எண்ணுவாயாக!

கன்பியூஷிய மதம் : பிறர் உனக்குச் செய்யக் கூடாது என்று நீ விரும்புவதை நீ பிறருக்குச் செய்யாதே !

சீக்கிய மதம் : உன்னை எவ்வாறு எண்ணிக் கொள்கிறாயோ அவ்வாறே பிறரையும் கருது.

யூத மதம் : உனக்கு எது கஷ்டம் தரும் என நினைக்கிறாயோ அதனைப் பிறருக்குச் செய்யாதே! இதுவே டோராவின் கொள்கை. மற்றவை யாவும் இக்கொள்கையின் விளக்கமே!

ஜைன மதம் : மகிழ்ச்சியிலும், துக்கத்திலும் எல்லா உயிரினங்களேயும் நம்மைப்போலவே எண்ணவேண்டும். எனவே தனக்கு எது விருப்ப மில்லாததோ அதனைப் பிறருக்கு ஒருவர் செய்யக் கூடாது.

## 28. தத்துவ விளக்கங்கள்

[அந்தந்தக்கால சமுதாயப் பின்னணி கலா சாரப் பழக்க வழக்கங்கள் தனி நபர்களின் மனநிலை ஆகியவை மதசம்பந்த தத்துவ விளக்கங்களாக அமைகின்றன. அதே சமயத்தில், அடிப்படைக் குறிக்கோளில் ஓர் ஒற்றுமை உள்ளது. பரஸ்பர அறிவுக்கும், சமுதாய இணைக்கத்திற்கும் அஃதே அடிப்படை. தியானத்திற்கேற்ற சில மஹா வாக்கி யங்கள் கீழே தரப்பட்டுள்ளன].

புத்த மதம் : நீ விரும்பும் மகிழ்ச்சியைப் பிறருக்குக் கொடு.

கிறிஸ்துவ மதம் : நானும் சொர்க்கத்தில் உள்ள என் தந்தையும் ஒருவரே.

கன்பியூஷிய மதம் : தீமையைப் பார்க்காதே. தீமையைபற்றிக் கேட்காதே, தீயதைச் செய்யாதே. இம் மூன்றுமே மகிழ்ச்சியாய் இருப்பதற்கு வழிகள்.

ஹிந்து மதம் : தத்வம் அஸி —நீயே அது.

ஜைன மதம் : அஹிம்சையே உன்னதமான மதம்.

யூதமதம் : அமைதியாக இருந்து ஆண்டவனை அறிந்துகொள்.

இஸ்லாம் : அல்லாவைத் தவிர்த்து வேறு கடவுள் இல்லை. முகமதுநபி அல்லாவின் திருத் தூதர்.

சீக்கிய மதம் : ஒரே கடவுளே இருக்கிறார். அவருடைய நாமம் ஸத் அல்லது உண்மை.

ஷின்டோ மதம் : தெய்வீக அருளை நாடிப் பெறுதற்குப் பிரார்த்தனையே முக்கியம்.

சூஃபி மதம் : அனல்ஹக்-நானே கடவுள்.

டோயிசம் : டாவோ எங்கும் உள்ளார். அதுவே மதிப்பற்ற பொக்கிஷம் அதுவே இரட்சிப் பது. அனைத்து உயிரினங்களின் சரணாலயம் அது.

சொராஷ்டிரிய மதம் : ஒரே கடவுள்தான். மாந்தர் வேறு வேறு பெயர்களில் அழைக்கின்றனர். இறைவனை அடைய தூய எண்ணம், தூய சொற் கள், தூய செயல்கள் வேண்டும்.

## 29. அஹிம்சை

1. எவரும் எந்த உயிருக்கும் தீங்கு செய்யக் கூடாது. மாறாக பிற உயிரைத் தன் உயிர்போல் போற்றவேண்டும். ஏனெனில் அஹிம்சையே உன்னத மதம் (ஜைன மதம் — மஹாவீரர்)

2. சிறியவை, பெரியவை என்னும் வேறு பாடில்லாமல், நாம் அனைத்து உயிரினங்கள்மீதும் நல்ல எண்ணம் நல்ல மனம் கொள்வோம். உலகம் முழுவதற்குமாக அன்பை கடைப்பிடிப்போம். (புத்தமதம் — புத்தர்)

3. கொலைச் செயல் புரியாதே. (இயேசு கிறிஸ்து)

4. ஒரு உயிரைக் காப்பாற்றியவன் மனித இனத்தையே காப்பாற்றியவன் ஆவான். ஏனெனில் உலகில் உள்ள விலங்குகள், பறவைகள் அனைத்தும் உன்னைப்போன்றவையே. (முகமதுநபி – இஸ்லாம்)

5. தீமையிலிருந்து நல்லதையும், பாவத்திலிருந்து புண்ணியத்தையும், இருளிலிருந்து ஒளியையும் ஒவ்வொருவரும் நாடவேண்டும்.

(ஸொராஸ்டிரர்)

6. அன்பான பரிவு என்பதே வாழ்நாள் முழுவதும் நாம் பின்பற்றவேண்டிய கொள்கை.

(கான்பியூஷியஸ்)

7. ஒரே ஆன்மா எல்லாவற்றிலும் உள்ளது. அனைத்தும் கடவுளின் வெளிப்பாடுகள். பிறருக்குத் துன்பம் இழைப்பதன் மூலம், உனக்கு நீயே துன்பம் இழைத்துக் கொள்கிறாய். பிறருக்குச் சேவை செய்வதன் மூலம் உனக்கு நீயே பணிபுரிந்து கொள்கிறாய். அனைவரையும் நேசி. அனைவருக்கும் சேவை செய். எவரையும் வெறுக்காதே. எண்ணம், சொல், செயல் ஆகிய எதிலும் எவருக்கும் தீங்கிழைக்காதே.

(சுவாமி சிவானந்தா – ஹிந்து மதம்)

## 30. சகோதரத்துவம், பிரபஞ்ச அன்பு, அமைதி

### புத்த மதம்

1. பிற உயிரினங்கள்பால் அன்பில்லாமல், பிற உயிரினங்களுக்குத் தீங்கிழைப்பவன் ஒதுக்கப்பட வேண்டியவன். (சுத்த நிபாதா)

2. கடவுளுக்குக் காணிக்கைகள் படைப்பதைக் காட்டிலும் தூய அன்பால் செய்யும் ஒரு செயல் சிறந்தது. (தம்ம பதம்)

3. எவரிடம் ஞானமும், தியானமும் உள்ளனவோ அவர் ஆனந்த சொரூபி.
(தம்ம பதம்)

## கிறிஸ்துவ மதம்

1. பிறருக்கு நீ செய்யும் எந்த தீங்கும் எனக்குச் செய்தது ஆகும். (பைபிள்)

2. உனக்குப் பிறர் என்ன செய்யவேண்டும் என்று விரும்புகிறுயோ, அதனையே நீ பிறருக்குச் செய். (பைபிள்)

3. அன்பே கடவுள். அன்பில் வாழ்பவன் கடவுளுள் வாழ்கிறுன். கடவுள் அவனுள் உறைகிறுர். (பைபிள்)

4. ''எந்த வீட்டிற்குள் நீ நுழைந்தாலும், முதலில் இவ்வீட்டில் அமைதி நிலவுவதாகுக'' என்று கூறு. (பைபிள்)

5. அமைதிவழி காண்பவர்கள் ஆண்டவனின் குழந்தைகள். அவர்களுக்கு இறையருள் உண்டு.
(பைபிள்)

## கன்பியூஷியஸ் மதம்

1. மாந்தர் அனைவரும் சகோதரர்கள்.

2. உனக்கு எது நல்லதில்லை என்று நினைக்கிறுயோ, அதனைப் பிறருக்குச் செய்யாதே.

3. எந்த இடத்திலும் அன்பு அழகு சேர்க்க வல்லது. அன்பற்றவர் புத்திசாலி இல்லே. கடவுளின் கண்ணிய நெறி அன்பு. மாந்தரின் அமைதி இல்லம் அன்பு. அன்பிலே குறைபாடு இருப்பது புத்தியிலே குறைபாடே!

4. அமைதி, தங்கத்தைப்பற்றிய ஆயிரம் விளக்கங்களுக்கு நிகர்.

## ஹிந்து மதம்

1. அகில உலகிலும் ஆண்டவன் நிறைந்துள்ளார்.

2. தம்மை மற்றவர் எவ்வாறு நடத்தவேண்டும் என்று நினைக்கிருயோ அவ்வாறே பிறரையும் அறிஞர்கள் நடத்துவர். (மகாபாரதம்)

3. பிற உயிரினம் பால் துவேஷம் இன்றி, அனைவரிடமும் நட்புடனும், பரிவுடனும் இருந்து பற்றும், அகங்காரமும் இல்லாமல், சந்தோஷத்திலும், துக்கத்திலும் சமநிலேயில் இருந்து, மன்னிக்கும் சுபாவம் கொண்டவர் எவரோ அவரே எனக்கு உகந்த பக்தர். (பகவத் கீதை)

4. கருணை, அன்பு, கொள்கையில் உறுதி, நலத்திலும் தீதிலும் பற்றற்ற நிலே ஆகியவை கொள்ளும் பயிற்சியின் மூலம் சித்தத்தில் அமைதி சேரும். (பதஞ்சலி யோக சூத்திரம்)

## இஸ்லாம்

1. தன்னை நேசிப்பது போலப் பிறரை நேசிக்காதவர் ஆண்டவனையே நம்பாதவர் ஆவார்.

2. உன்னைப் பொருட்படுத்தாமல், கடவுளையே நினைத்திருப்பவரே அன்பர்.

3. அமைதியின் ஆடை மங்குவதில்லை

## ஜைன மதம்

1. பிறர் பால் பகைமை பாராட்டாதீர்கள்.

2. உலகப் பொருட்களில் பற்றில்லாமல், பிற உயிரினங்களை தம்மைப்போலவே நடத்தவேண்டும்.

3. எல்லா உயிரினங்களிடமும் இரக்கம் காட்டுங்கள்.

4. விரைந்து மறையக் கூடிய பொருட்கள் பால் பற்றுவைப்பது அமைதியின் தூய்மையில் கறை ஏற்படுத்தும்.

## யூத மதம்

1. பிறரை உன் உள்ளத்தினுள் வெறுக்கக் கூடாது. ஆத்திரம், பழி வாங்கும் உணர்வு ஆகியவை இன்றி, உன்னைப்போலவே பிறரையும் நேசிக்க வேண்டும்.

2. ஆண்டவனின் அனைத்துக் கட்டளைக்கும் அன்பு நிறைந்த செயல்கள் நிகரானவை.

3. அமைதி காட்டி, நல்ல செய்தி கொணருவோர்தம் பாதங்கள் அழகானவை.

## ஷின்டோ மதம்

1. நாடு, இனம், மொழி, பழக்க வழக்கங்கள், பண்பாடு ஆகிய வேறுபாடுகளைப் பொருட்படுத்தாமல், மாந்தர், ஒருவருக்கொருவர் உதவி புரிந்து

சகோதர பாவம் காட்டி, பரஸ்பர மகிழ்ச்சி காண வேண்டும்.

2. அன்பான இரக்கமுடையவனே ஷின்டோ வின் பிரதிநிதி.

3. நாட்டுக்கு அமைதி கிடைக்கட்டும்! வீட்டுக்குப் பாதுகாப்புக் கிட்டட்டும்! விளைவு பெருகட்டும்!

## சீக்கிய மதம்

1. உன்னை எவ்வாறு கருதிக் கொள்கிறாயோ, அப்படியே பிறரையும் கருது.

2. அன்பில்லாத உடலைச் சுடுகாடு என்று எண்ணு.

3. பயன் கருதி அன்பு காட்டுவோர் அன்பற்றவர்.

## டோயிசம்

1. பயன் கருதாமல் பிறருக்கு உதவிடு.

2. அடுத்தவரின் லாப, நஷ்டத்தை உன்னு டையவையாகக் கருதிடு.

3. நல்லவரிடம் நல்லவனாக இருப்பேன். நல்லவராக இல்லாதவரிடமும் அவர்களை நல்லவர் ஆக்குவதற்காக நான் நல்லவனாக இருப்பேன்.

## சொராஷ்டிரிய மதம்

1. விரோதியை நண்பராக்குவது, கொடிய வரை நல்லவராக்குவது, மூடர்களை அறிஞர் ஆக்கு வது இம்மூன்றுமே மாந்தரின் பொறுப்புகள்.

2. தனக்கு நல்லது அல்லாததைப் பிறருக்குச் செய்யாதிருப்பதே நல்ல இயல்பு ஆகும்.

---

அத்தியாயம் - ஐந்து

## அனைத்துலக மதங்களின் சம்மேளனம்

### 31. பூரணத்திற்கான இணக்கம்

[அகில உலக மத மாநாட்டில்
சுவாமி சிவானந்தா–துவக்க உரை–டிசம்பர் 1945]

வேறுபட்ட கொள்கைகள், நடை முறைகள் உள்ளது போலத் தோன்றும் வேறுபட்ட மதங்களை இன்று நாம் காண்கிறோம். எல்லா மதங்களின் குறிக்கோளும் ஒன்றே என்பதை நாம் அறிவோம். பெறற்கரிய இப்பிறவியின் நோக்கத்தை மறந்து விலங்கு நிலையில் வாழும் மாந்தரை உயர்த்துவதே அனைத்து மதங்களின் குறிக்கோள்.

அவரவர் சொந்த விருப்பு, வெறுப்பு, உடல் பலம், மிருகபலம் ஆகியவற்றுடன் மதத்தை இணைத்து, மதத்தின் அடிப்படைக் குறிக்கோள் மறைக்கப்பட்டு விட்டது. அதீதமான அறிவாராய்ச்சி, புனித நூல்களை மாறுபட்ட வியாக்யானம் செய்வது, தவறான உதாரணங்கள், போதனைகள் மூலம் மக்களைத் திசை திருப்புவது ஆகியவற்றின் விளைவாக மதம் மூட ஆசாரம் என்று கருதப்படும் நிலைக்கு இடம் ஏற்பட்டு விட்டது.

மக்கள் மனத்திலிருந்து இவ்வெண்ணம் அகற்றப்பட வேண்டும். மதத்திற்கு மறைவு ஏது?

மதத்திற்குப் புத்துயிர் ஊட்ட நம் உதவி தேவையும் இல்லை. மதத்தைப் பற்றிய சரியான கருத்துக்கு நாம் பொறுப்பு. அனைத்தையும் வென்று நிற்பது மதம்.

தவறான பாதையிலிருந்து மாந்தரை மீட்பது மதத்தலைவர்களின் கடமை. நீண்ட நாள் யுத்தத்திற்குப் பிறகு, வென்றவரும், தோற்றவரும் அமைதியை நாடி அருளாளரிடம் தஞ்சம் புகுவதை இன்றும் காண்கிறோம்.

மேலெழுந்த வாரியான வேறுபாடுகளைப் பொருட்படுத்தாமல், இந்த பிணக்குகளைத் தவிர்த்து, எல்லா மதங்களிடையேயும் இணக்கம் காணும் தருணம் இதுவே. ''இறைவனே மனிதன், மனிதனே இறைவன்'' என்னும் ஒரே சர்வ மதத்தை ஏற்படுத்த வேண்டிய தருணம் இதுவே.

## 32. ஒரே பொதுவான தோற்றம்

*[28—12—1945]*

ஹரி ஓம்! துவக்கத்தில் பூரண ஆத்மனை பிரம்மம் மட்டுமே இருந்தது. அனைத்து ஆனந்தங்களையும் பிரம்மம் மட்டுமே அனுபவித்து வந்தது. பிரம்மம் பெருகத் தீர்மானித்தது. நம்மிடமுள்ள இனிப்புப் பண்டங்களைப் பிறருக்குப் பகிர்ந்து கொடுக்கும்போது நமக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாகிறதல்லவா? அதுபோலவே பிரம்மம் தம் ஆனந்தத்தை மற்றவருடன் பகிர்ந்து கொள்ள விரும்பியதால் அது பெருகிட விரும்பியது. பிரம்ம ஸங்கல்பம் ஆங்கிருந்தது. ஆங்கு ஓம் என்ற நாதம் எழுந்தது. உடன் அகில உலகமும் தோன்றியது. அனைத்து உயிரினங்களும் ஓம் என்ற நாதத்திலிருந்து தோன்றின. ஓம் என்பதே எல்லாம்.

அனைத்து மொழிகளும் ஓம் என்னும் நாதத்திலிருந்தே தோன்றின.

ஓம் என்பது மங்களகரமான வார்த்தை. ஓம் என்பது ஞானபூர்வமான வார்த்தை. "துவக்கத்தில் வார்த்தையே இருந்தது. கடவுளிடம் சொல் இருந்தது. சொல்லே கடவுள்," என்று இயேசுநாதர் பைபிளில் கூறுகிறார்.

பொருளைக்குறிக்காத சொல்லோ பெயரோ கிடையாது. மனத்துள் 'பசு' என்னும் வார்த்தையைத் திரும்பத் திரும்பச் சொன்னால், மனத்துள் பசுவின் உருவம் தோன்றும்.

ஓம் என்னும் சொல்லை பாவத்துடன், ஆழ்ந்த உணர்வுடன் மூன்று முறைகள் ஜெபியுங்கள். எல்லா மந்திரங்களும் ஓம் என்னும் சொல்லுடன் தொடங்குகின்றன. யாகங்களையோ, எந்த மத அனுஷ்டானத்தையும் குருமார்கள் ஓம் என்னும் உச்சாடனத்துடனேயே ஆரம்பிக்கின்றனர். கடிதம் எழுதும்போது ஓம் என்னும் எழுத்துடன் எழுதத் தொடங்குங்கள். நாம் ஓம் உச்சாடனம் செய்துவிட்டோம். இப்போது அனைத்துலக மத சம்மேளனம் துவக்கப்பட்டுவிட்டது.

எல்லா மதங்களும் "ஓம்" விருந்தே தோன்றியுள்ளன. எல்லா மதங்களும் இவ்வுலகத்திற்குத் தேவையே. ஒவ்வொரு மதத் தலைவரும் அவர் காலத்திய மக்களின் பரிணும வளர்ச்சிக்கு ஏற்ப மக்களுக்குப் போதனைகளை வழங்கவே இங்கு அவதரித்துள்ளார்கள். கொலை, கொள்ளை, பிறருக்குத் துன்பம் தருதல் ஆகியவற்றில் ஈடுபட்டிருந்த எழுத்தறிவற்ற அரேபியரிடையே ஒழுக்க நெறிகளைப் போதிக்கவே முகமது நபி அவதரித்தார். அக்காலத்தில் ஆழ்ந்த தத்துவ ஞானம் தேவைப்படவில்லை.

பிரம்ம சூத்திரங்களை அப்போது அவர் போதித்திருந்தாலும் பயன் இருந்திருக்காது. பிரம்மத்தைப் பற்றிய ஆராய்ச்சி அப்போது தேவைப்படவில்லை. ''தருமம் செய்யுங்கள். பிறரை நேசியுங்கள். எல்லோரையும் சகோதரர்களாகப் பாவியுங்கள். மெக்காவிற்குப் புனித பயணம் செய்யுங்கள்.'' என்பதே அவருடைய போதனை. அப்போது அது போதுமானது.

எல்லா மதங்களின் அடிப்படையும் ஒன்றே. ''இறைவனிடமே உண்மையான நித்தியமான இன்பம் கிட்டும். இறைவன் நித்தியமானவர், மாறுதவர், எங்கும் நிறைந்திருப்பவர், சர்வ வல்லமை வாய்ந்தவர், ஸர்வ ஞானி, சாந்தம், ஞானம், ஆனந்தம் ஆகியவற்றின் வடிவினர் இறைவன். அனைவரையும் நேசித்து அனைவருக்கும் சேவை செய்யுங்கள். தூய்மை அன்பு சேருங்கள். கண்ணியமான உயரிய எண்ணங்களை வளர்த்துக் கொள்ளுங்கள். உண்மையாக இருங்கள். மனத்தை ஒருமுகப்படுத்தி, தியானம் பழகி ஆத்மனை அறிந்து கொள்ளுங்கள்'' எல்லா மதங்களும் இக்கருத்துக்களை ஏற்றுக் கொள்கின்றன. அனைத்து மதங்களின் அடிப்படைக் கருத்துக்கள் இவையே!

ஒவ்வொரு மதத் தலைவர்பாலும் நீங்கள் மரியாதை காட்டவேண்டும். பகவான் கிருஷ்ணனிடமோ, பகவான் சங்கரரிடமோ உங்களுக்கு உள்ள அதே அன்பும், மதிப்பும் புத்தரிடமும், இயேசுநாதரிடமும், முகமது நபியிடமும் உங்களுக்கு இல்லாதிருக்கலாம். ஆனால் அதனை வளர்த்துக்கொள்ள வேண்டும். இயற்கையிலேயே ஒருசிலரை மட்டும் மதிக்கும் இயல்பு உங்களுக்கு இருக்கிறது. ஆனல் ஆத்மீகத் துறையில் முன்னேற முன்னேற எல்லா மதத் தலைவர்களையும் சமமாக மதிக்கவேண்டும்.

சில சமயங்களில் உங்களுக்கு உள்ளார்வம் கிடைப்பது எங்கிருந்து என்று கூறுவது கடினம். அது குரு நானக், முகமது நபி, இயேசுநாதர் அல்லது புத்தரின் போதனையாக இருக்கலாம். எனவே எல்லா மதத் தலைவர்களையும் நீங்கள் மதிக்க வேண்டும் அப்போதுதான் உங்களுக்கு ஆன்மீக வளர்ச்சியும் பூரண நிலையும் கிட்டும்.

அகில உலக மத சம்மேளனம் இப்போது பிறந்துள்ள புதிய குழந்தை. விரைவில் இது விருக்ஷமாக வளர்ந்து இவ்வுலகில் எண்ணற்ற ஆன்மவேட்கை கொண்டுள்ள உங்களுக்கு எண்ணற்ற தன் கிளைகளால் நிழல் கொடுக்கும். கடவுளின் அருளால் இது சீக்கிரத்தில் வளர்ச்சி அடையும். உலக மத வரலாற்றில் எல்லா மதங்களும் சிறிய தொடக்கத்தையே கொண்டுள்ளன. சிறுகச் சிறுகவே அவை வளர்ச்சி கண்டுள்ளன. அடுத்த ஆண்டில் நமக்கு அதிக அளவில் பிரதிநிதிகள் இருப்பர். இங்கு நிகழ்த்தப்பெற்றுள்ள உரைகள் அனைத்தையும் நூல்களாக வெளியிடுவோம். மக்களுக்கு இது பேரளவில் பயன்படும்.

அனைத்துலக மத சம்மேளனம் பல்வேறு மதங்களைச் சார்ந்த மக்களிடையே லயம், இணைப்பு, அமைதி, நல்லெண்ணம், அன்பு ஆகியவை ஏற்பட இயன்றதைச் செய்து, சாந்தம், நேர்மை தழுவிட ஆண்டவனின் அருளாட்சி இவ்வுலகில் ஏற்படப் பாடுபடும் என்று நம்புவோமாக!

நீங்கள் அனைவரும் ஒன்றுக அமர்ந்து, பேசி, பணிபுரிந்து அன்பு, அமைதி சேர்த்து பழகுவீர்களாகுக! நீங்கள் அனைவரும் இப்பிறவியிலேயே ஆன்மீக ஞானம் பெற்று, சாந்தம் அமைதி ஆகியவற்றை உலகெங்கும் ஒளிவீசச் செய்ய வேண்டும் என்பதே என் பிரார்த்தனை!

ஓம் சாந்தி! ஓம் சாந்தி! ஓம் சாந்தி!

## 33. இணக்கம் காணும் இரகசியம்

*[அகில உலக மத சம்மேளனத்தில் 29—12—46 அன்று சுவாமி சிவானந்தா ஆற்றிய உரை]*

இன்று இச்சம்மேளனத்தின் முதல் ஆண்டு நிறைவு விழா. இன்று இச்சம்மேளனத்தின் மூன்றும் நாள். ஆண்டவனின் அருளாலும், தெய்வீக வாழ்க்கைச் சங்க அங்கத்தினர்களின் ஒத்துழைப்பாலும் உலகின் பெரிய மனிதர்களின் ஆதரவாலும் இச்சம்மேளனம் குறுகிய காலத்தில் அருஞ்சாதனை ஆற்றியுள்ளது.

உலகின் ஒவ்வொரு பிரஜையும் சமய ஒருமைப் பாட்டின் அவசியத்தை உணர்ந்தாக வேண்டும். சமய இணக்கமே உலக அமைதிக்கு வழி கோலும். வேறுபட்ட உணர்வுகள், கருத்துக்கள் கொண்ட பலதரப்பட்ட மக்கள் இவ்வுலகில் வாழ்கின்றனர். ஆனல் எல்லா உயிரினங்களுள்ளும் ஒரே நித்திய ஆத்மா உறைகிறது. மனித இனத்தின் ஒற்றுமையின் அடித்தளம் ஆன்மீகமாக இருக்க வேண்டும். அப்போதுதான் மனித இன ஒருமைப் பாடு நிலைத்து நிற்கும். அரசியல், விஞ்ஞான சமூக அமைப்புகள் மூலம் ஏற்படும் ஒற்றுமை நிரந்தரமாக இருக்காது.

குண விகாரங்களால் இவ்வுலகில் நாய் வாலின் நுனி போன்று குறுகியதாக இருந்தபோதிலும் சம்சார சாகரத்திலிருந்து மக்களை உயர் நிலைக்கு மேலுயர்த்துவதற்கு ஆண்டவன் அவ்வப்போது அவதார புருஷர்களை இங்கு அனுப்பி வைக்கிறர். எல்லா இடங்களிலும் ஸத்சங்கம் உள்ளது. மக்கள் தீவிரமாக ஆன்மீக சாதனங்களில் ஈடுபட்டு மெய்யறிவு பெறுகின்றனர். மகாத்மாக்களின் சீடர்கள்

தங்கள் குருமார்களின் பணியைத் தொடருகின்றனர். மகான்களின் போதனைகளை நூல் வடிவில் வெளிக்கொணருகின்றனர். இவ்விதம் ஆன்மீக இயக்கம் தொடர்ந்து கொண்டிருக்கிறது.

நம் முன்னே இருக்கும் பணி மகத்தானது. நீங்கள் ஊக்கம் இழந்துவிடக்கூடாது. இப்போதுள்ள உண்மையான தொண்டர்களின் எண்ணிக்கை போதாது என்று நீங்கள் நினைக்கக்கூடாது. உங்களுக்கு மனவலிமை, உண்மை பாவமுள்ள ஒரு தொண்டரால் இச் சம்மேளனத்தை உயர் நிலைக்கு ஏற்றிவைத்து, உலக ஒற்றுமைக்கு வழி காண முடியும். ஒரு சங்கரர், ஒரு இயேசுநாதர், ஒரு புத்தர், ஒரு காந்தி, ஒரு தயானந்தர், ஒரேயொரு விவேகானந்தரே எல்லாப் பெரும் பணிகளையும் ஆற்றியவர்கள். நற்பணியாளர்களின் பின்னே ஆண்டவனின் அருட்கரம் மறைமுகமாக இயங்கிக் கொண்டுள்ளது. தொண்டர்களைத் தூண்டி அவர்களுக்கு வழி காட்டி இயங்கச் செய்பவர் பகவானே.

ஆரம்பத்தில் பன்னிரண்டே பேர் கொண்ட சங்கத்தைத்தான் ஹிட்லர் அமைத்தார். ஐந்தே பேர்களுடன்தான் காங்கிரஸ் இயக்கம் ஆரம்பிக்கப் பட்டது. அஃது இப்போது பிரம்மாண்டமாக வளர்ந்து அதன் பணிகளின் பயன்களைக் காண ஆரம்பித்துள்ளது. ஹோமியோபதி தத்துவத்தை தன்னந்தனியாகவே ஹானிமேன் முதன் முதலில் மக்கள் முன் வைத்தார். இப்போது அலோபதி மருத்துவர்கள் ஹோமியோபதி முறைக்கு மாறி விட்டனர். சாதாரண வியாபாரிகளாக ஆங்கிலேயர் இந்தியாவிற்கு வந்தனர். இப்போது அவர்கள் சாம்ராஜ்யம் முடிவில்லாமல் பரந்துள்ளது.

மத ஒற்றுமை மூலமே போர்களை நிறுத்த முடியும். மத ஒற்றுமை மூலமே உலக அமைதி காண முடியும். மனிதனுக்கு முதலில் வேண்டுவது கல்வியறிவு. அனைவரும் ஆண்டவனின் குழந்தைகள் என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்தாக வேண்டும். சகோதரத்துவ உணர்வு மாந்தருக்கு வேண்டும். மனித இனத்திற்கு இடைவிடாது சேவை செய்வதன் மூலமும், கடவுளை நினைத்திருப்பதன் மூலமும், பரந்த அன்பினை ஒவ்வொருவரும் வளர்த்துக் கொள்ள வேண்டும். அஹிம்சை, சத்தியம், பிரம்மச்சரியம் ஆகியவற்றின்மூலம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் சர்வதேச சங்கமும் அகில உலக மத சம்மேளனமும் தோன்ற வேண்டும். மனிதர் ஒவ்வொருவரும் மாறியமைய வேண்டும். தெய்வீக நெறிகளைப் பேணுவதன்மூலம் ஒவ்வொருவரும் தம் அசுர இயல்பினை முற்றிலுமாக அழித்தாக வேண்டும்.

உங்கள் பணி சுலபமானது. நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டாம். தெய்வீக வாழ்க்கை சங்கத்தின் ஒவ்வொரு உறுப்பினரும், ஆசிரியர்கள், சமய போதகர்கள், மதத் தலைவர்கள், குடும்பத்தார்கள் ஒவ்வொருவரும் நல்லெண்ணம், அமைதி, ஸர்வ ஜீவ ராசிகள்பாலும் அன்பு ஆகிய நெறிகளைப் பரப்பி பிறரை மத ஒற்றுமையின் உண்மையை உணர்ந்திடச் செய்வதற்கு உண்மையாக உழைத்திட்டால், உங்கள் பணி மிகச் சுலபமாகிவிடும். சரியான மனோபாவத்துடனும், நோக்குடனும், ஒவ்வொருவரும் அவரவர் வாழும் இடத்தில் அகில உலக மத சம்மேளனத்தை ஆரம்பிக்கலாம். இருபத்தைந்து பேர் இருநூற்றைம்பதாகப் பெருகுவர். இருநூற்றைம்பது இரண்டாயிரத்து ஐந்நூறாகவும், அது பல லட்சங்களாகவும் பெருகும். அப்போது வெற்றி அருகில்! ஏற்கனவே நீங்கள் ஜெயம் அடைந்து விட்டீர்கள்.

ஒற்றுமை ஏற்படுத்துவதற்கான ரகசியத்தை அறிந்து கொள்ளுங்கள். கடவுளை நம்புங்கள். எல்லா மதங்களைப்பற்றிய ஒப்பீட்டு அறிவினைப் பெற்று, மதங்களிடையே உள்ள அடிப்படை ஒற்றுமையை உணர்ந்து கொள்ளுங்கள். இதயத்தில் தூய்மை சேர்த்துக் கொள்ளுங்கள். இடைவிடாது தொடர்ந்து முயலுங்கள். தன்னம்பிக்கை தைரியம் கொண்டு முன்னேறுங்கள். வெற்றி உங்கள் கைகளில்.

முதற்கண் உங்கள் இதயத்திலும் அதன் பின்னர் நீங்கள் வாழும் பகுதிகளிலும் அகில உலக சம்மேளனம் அமைத்து உலக அமைதிக்காக உண்மையுடன் உழைப்பீர்களாக! தெய்வீக வாழ்க்கை நடத்துவீர்களாக! தெய்வீக வாழ்க்கையின் அடித்தளமான இயமம் அல்லது நற்கர்மத்தில் திளைத்திடுவீர்களாக!

## 84. பிரபஞ்ச அச்சு

[அகில உலக சம்மேளனத்தின்
நான்காம் கூட்டம் — 1947]

அகில உலக சம்மேளனத்தின் நான்காம் கூட்டம் நடக்கும் மகிழ்ச்சிகரமான நாள் இன்று. எல்லா மதங்களின் அடிப்படையும் ஒன்றே. பிரம்மமே அந்த அடித்தளம்.

பரிவு உணர்வே மதத்தின் ஆணிவேர். மதமில்லாமல் நற்பண்பு இல்லை. மரணத்தின்போது, மற்றவை உடலுடன் அழியும்போது, நம்முடன் இருப்பது மதமே.

நம்முள்ளே இருக்கும் தெய்வீகம் உயர்நிலை எய்துவதே மதமாகும், நம்முள்ளே மறைந்துள்ள நித்திய ஆத்மாவை உணர்வதே மதமாகும்.

மனத்தையும், புலன்களையும் அடக்கி, நற் பண்புகளை வளர்க்கும் பயிற்சியே மதம் ஆகும். அஹிம்சை, சத்தியம், பிரம்மச்சரியம் ஆகியவற்றில் பயிற்சி காண்பதே மதம் ஆகும். இதயத்தினுள்ளே நித்திய ஆத்மனைத் தியானித்துப் பழகுவதே மத அனுஷ்டானமாகும்.

தைரியமும் உண்மையும் இல்லாத மதம் இல்லை. அன்பு, பரிவு, எண்ணத்தூய்மை இல்லாத மதம் இல்லை.

கொல்லாமையே உயரிய மதம். ஆத்ம பாவத்துடன் மனித இனத்திற்கு சேவை புரிவதே உயரிய மதம்.

மதம் உயரிய வரப்பிரசாதம். பக்தி, தியானம், சேவை, அஹிம்சை, தன்னடக்கம், கட்டுப்பாடு ஆகியவற்றை தன்னுள் அடக்கியது மதம். மத அனுஷ்டானத்தில் இருந்து கொண்டிருப்பவனைத் தேவர்களும் வணங்குவர்.

மத அனுஷ்டானத்திற்கு செல்வம், வசதி, கூட்டம் ஆகியவை தேவையில்லை. சத்சங்கம், ஆன்மீக நூல்களைப் படித்தல், சாத்வீக உணவு ஆகியவையே மத அனுஷ்டானத்திற்கு தேவை!

நடக்கும் போது பிற உயிர்களுக்குத் தீங்கு விளைவிக்காதவாறு கவனமாக நடப்பீர்களாக! பிறர் உள்ளத்தைப் புண்படுத்தாமல் மரியாதை யுடன் பேசுங்கள். தூய்மையான உணவு கொள் ளுங்கள். எது நேரினும் உண்மையே பேசுங்கள். எண்ணம், சொல், செயல் ஆகிய மூன்றிலும் தூய் மையாக இருங்கள். இவை அடிப்படையான மத அனுஷ்டான நெறிகள்.

மழித்தலிலும் நீட்டலிலும் இல்லை மதம். கமண்டலத்திலும், சமயச் சின்னங்களிலும், சங்கு முழக்கத்திலும் இல்லை மதம். தூயவராக, நல்லவராக, அன்பானவராக, இனிமையானவராக, கண்ணியமானவராக, பொறுமையாளராக, எளிமையாளராக, உண்மையாளராக இருங்கள். சம நோக்கு உடையவரே உண்மையான மதவாதி. பாரபட்சமற்ற, தன்னடக்கமுள்ள, பொறுமையாளரே உண்மையான மதவாதி. உண்மை, அஹிம்சை, தூய்மைசேர்த்து வாழ்ந்தால் நீங்கள் எல்லா மத அனுஷ்டானத்தின் பயனையும் பெற்றவர்கள் ஆவீர்கள்.

நியாய உணர்வுடன், ஒவ்வொருவருடனும் நேச பாவத்துடனும், உண்மையுடனும், உள்உறையும் நித்திய ஆத்மனைத் தியானிக்கும் இயல்புடனும், நல்லன செய்து பிறரை மகிழ்விக்கும் இயல்புடனும், வறியவரை, நோயுற்றவரைப் பேணும் இயல்புடனும் வாழ்வதே தூய்மையான மதம்!

அகில உலகத்திலும் அனைவருக்கும் பயன்தர வல்ல அன்பு மதத்தை அமைத்திடுங்கள். பிரபஞ்சத்தின் உயிரினங்கள் அனைத்திற்கும் வரப்பிரசாதமான இதய பூர்வமான மத அனுஷ்டானத்தைப் பரப்பிடுங்கள். உலக உயிரினங்கள் அனைத்திற்கும் அஃது அளப்பரிய நலத்தினைக் கொடுக்கும்.

அகில உலக மதங்களின் சம்மேளனம் அன்பு பூர்வமான மதத்தை, இதய பூர்வமான மதத்தை, ஒரு நிலை காணும் ஞான பூர்வமான மதத்தை உலக முழுவதிலும் நிலைத்திடச் செய்யட்டும்.

## 35. நல்லதின் ஊற்று — மதம்

[1947 டிசம்பரில் நடைபெற்ற அகில உலக மத சம்மேளனத்தின் ஐந்தாம் கூட்டத்திற்கு சுவாமி சிவானந்தா வழங்கிய அருளுரை].

ஒவ்வொருவரின் இதயத்திலும், வாழ்விலும் மதம் உயிரோட்டமான செல்வாக்கு பெற்றுள்ளது. மனத்திற்கு அது ஆன்மீக உணவு தருகிறது. மதம் மனிதனை தெய்வீகமாக்குகிறது. மதம் என்பது தெய்வீக வாழ்க்கை. மதம் மனத்தை உருக்கி மாற்றித் தூய்மை சேர்க்கிறது.

மதத்தின் அடிப்படை நம்பிக்கை. மதத்தின் மேல் நோக்கு ஆன்மீக பரிபாகம். புனித நிலை, உண்மை, தூய்மை, அஹிம்சை, நல்லது கெட்டது எது என்று பாகுபடுத்தறியும் உணர்வு, பாரபட்ச மற்ற தன்மை, சுயக்கட்டுப்பாடு, மன ஒருமைப்பாடு ஆகியவை மத மாளிகையின் சுவர்கள். ஆன்மீக வேட்கையே செங்கற்கள். அன்பே சிமெண்ட்.

சமூகப் பழக்க வழக்கங்களும், சடங்குகளுமே மதம் என்று அறியாதவர்கள் எண்ணுகின்றனர். இவையல்ல மதம். சமூகக் கட்டுக்கோப்பையும், தனி நபர்களின் ஆன்மீக வாழ்க்கை நிலைக்கும் ஏற்ப காலத்திற்கேற்றவாறு சமூகப் பழக்க வழக்கங்கள் மாறிக்கொண்டு வருகின்றன.

மதம் மாறாதது, நித்தியமானது. மத அனுஷ்டானங்களை உண்மையாகப் பின்பற்றுவோர்க்கு நித்திய ஆனந்தமும், பிறப்பு இறப்பு எனும் நிலைகளிலிருந்து முழு விடுதலையும் கிட்டும்.

வேத நூல்கள் கூறுவதை அப்படியே நம்புங்கள். அற நூல்கள் பணிப்பதை அப்படியே செய்யுங்கள். மதத்தின் இலக்கினை நீங்கள் அடைந்துவிடலாம்.

எல்லா மதங்களும் பூரணநிலை, விடுதலை அல்லது கடவுள் உணர்வு எனும் நிலைக்கு வழி காட்டுகின்றன. எல்லா மதங்களும் அடிப்படையில்

ஒன்றே. ஆத்மாவை அறிந்து ஒன்றுபடுதலே அடிப்படைத் தத்துவம். இதுவே இதயபூர்வமான அன்பு பூர்வமான மதம். எல்லா மதங்களும் ஆன்மீக ஒருமைப்பாடு, அன்பு என்னும் ஒரே மதத்தின் பல்வேறு வியாக்யானங்களே!

அறியாமை, பேராசை, பதவி வெறி ஆகிய வற்றால் மனிதன் மதத்தின் அடிப்படையை மறக்கிறான். அவன் மதத்தின் அடிப்படை நெறியில் புறம்பாக நடக்கிறான். மிருக நிலைக்கு இறங்குகிறான். ஒழுக்க நெறிகள் பற்றிய அறிவினை இழக்கிறான். குழப்பம் விளைவிக்கிறான். குறும்பு செய்கிறான். கொலை செய்கிறான். கொள்ளையடிக்கிறான். நீதிபதியின் சட்டம் நிலைக்கிறது. இரங்கத்தக்க நிலை.

எல்லா மதங்களின் அடிப்படை ஒற்றுமையை மனிதன் புரிந்துகொண்டு உண்மையான மதவாதியாக விளங்கினால், எல்லா உயிரினங்களும் ஒன்றே என்னும் உண்மையை அவன் அறிந்திருந்தால், எல்லாரும் கடவுளின் குழந்தைகள் என்பதை அவன் அறிந்திருந்தால், கர்மாவின் விதியை அவன் அறிந்திருந்தால், ஞானிகள் மதத் தலைவர்கள் ஆகியோரின் போதனைகளை அவன் அறிந்திருந்தால், மனத்தாலும், சொல்லாலும், செயலாலும் பிறருக்குத் தீங்கு செய்வதைப்பற்றி மனிதன் நினைத்துக்கூடப் பார்க்கமாட்டான்! வெடிகுண்டுகளைத் தயாரிக்க மாட்டான். எப்போதும் தெய்வீக வாழ்க்கை வாழ்ந்து நித்திய ஆனந்தத்தில் திளைத்திருப்பான்! எப்போதும் பிறருக்குச் சேவை செய்து கொண்டிருப்பான். பிறர் மகிழ்ச்சிக்காக தன்னால் இயன்றதைச் செய்வான்.

மத விரோதமான வாழ்க்கையே போர்களுக்கும், கலகங்களுக்கும் காரணம். சஞ்சலத்திற்கும்,

அரசியல் கட்சி வேறுபாடுகளுக்கும், பிளவுக்கும், பிரிவினைக்கும், கொலைக்கும், கலகத்திற்கும், இழிவான அனைத்திற்கும் மத விரோதமான வாழ்க்கையே காரணம்.

உண்மையான மதவாதி இவ்வுலகின் கடவுளின் பிரதிபிம்பம். அவன் அனைத்தையும் இணைக்கும் ஆற்றல். அவன் அன்பின் வடிவம். அவனுடைய இதயம் கருணை, அன்பு, பாசம் நிரம்பியது. அவன் அமைதியின் தந்தை. அவன் உயரிய மனிதன்!

அற நூல்களை ஓதுவதால் மட்டும் ஒருவர் மதவாதியாகிவிட முடியாது. உபவாசம், சிரசாசனம் போன்ற உடல் பயிற்சிகளால் மத அனுஷ்டானம் கைகூடாது. கடுமையான கட்டுப்பாடான வாழ்க்கையே மதவாழ்க்கை — கீழ்த்தர உணர்வுகளை நீக்கி, நித்தியமான பூரண ஆனந்தநிலைக்கு வளர்வதே மத வாழ்க்கை!

மதத்தை நீக்கிவிட்டால், மனித வாழ்க்கையில் என்ன குறிக்கோள் உள்ளது? பிறந்ததின் லட்சியத்தினின்று வெகு தொலைவில் விலகி நிற்கிறுன். வாழ்க்கை வீண் ஆகிறது. மதமில்லாமல் வாழ்க்கையே இல்லை. மதமே வாழ்க்கையை மதிப்புமிக்கதாகச் செய்கிறது. மதமே அன்பு, மகிழ்ச்சி, பக்தி, ஆகியவற்ருல் மனத்தை நிரப்புகிறது. உண்மையான மதம் உங்கள் நடத்தையின் ஒவ்வோர் அங்கத்திலும் தன் ஆதிக்கத்தைக் காட்டுகிறது. உலகின் வாழ்க்கையைத் தெய்வீகம் ஆக்குகிறது. மனிதனை இறைவனுடன் இணைக்கும் பிணைப்பே மதம்.

மதம் சமுதாயத்தின் அடித்தளம். நன்மை, மகிழ்ச்சி ஆகியவற்றின் ஊற்று. தனி நபரின் குணநலம், வளம் ஆகியவற்றின் அடித்தளம். அதன்

மூலம் நாட்டின் அடித்தளம், நாகரிகம், சட்டம், ஒழுங்கு, நல்லொழுக்கம், ஆகியவற்றுடன் மனிதனை உயர்த்தவல்ல, மனிதனுக்கு அமைதியைத் தரவல்ல அனைத்தும் மத அனுஷ்டானத்தின் பயன்களே !

மனிதனுக்கும் இறைவனுக்கும் உள்ள நெருக்கமான பிணைப்பை மதம் நமக்கு போதிக்கிறது. மாந்தருள் தெய்வீக உணர்வினைத் தோற்றுவிக்கிறது. மாந்தருள் தீவிரமான நேரிய எண்ணங்களை மதம் தோற்றுவிக்கிறது. மதம், நம்முடனும், நம்முடைய தினசரி வாழ்க்கையுடனும் இரண்டறக் கலந்துள்ளது. மதம் நமக்குப் பாதுகாப்பு, நித்திய ஆனந்தம் அளிப்பதுடன், மண்ணுலக நம்பிக்கைகள் மறையும்போது, மதம் நமக்குப் புதிய நம்பிக்கைகளை அளிக்கிறது.

மத அனுஷ்டானம் மகத்தான வரப்பிரசாதம். அது மனிதனை லௌகீக நிலையினின்று, மன அழுக்கினின்று, நன்றியற்ற நிலையினின்று உயர்த்துகிறது. மதத்தால் ஒளிபெறாத அறிவு வீண் — தத்துவத்தால் செய்ய இயலாததை மதம் செய்கிறது. மத நெறிகளின்படி வாழ்வீர்களானால், உங்களுக்கு ஞானம் கிட்டும். உங்களுக்கு நித்திய நிலையும், நித்திய அமைதியும், நித்திய ஆனந்தமும் கிட்டும்—உலகின் மிகச்சிறந்த ஞானிகளுள், ஆனந்த புருஷர்களுள் ஒருவராக நீங்கள் ஆவீர்கள்.

நித்திய ஆனந்தம், அமைதி ஆகியவற்றின் உறைவிடம் மதம். எல்லா உயிரினங்களும் செல்ல வேண்டிய இலக்கு அதுவே. அது நேர்மை, தூய்மை நித்திய ஆனந்தம் ஆகியவை நிலைகொள்ளும் மாளிகை. ஆயிரமாயிரம் அணுக்குண்டுகளாலும் அழிக்க முடியாத கற்கோட்டை மதம்.

மதம் என்பது வெறும் தத்துவம் இல்லை. மதம் என்பது வெறும் நம்பிக்கையோ, உணர்ச்சியோ இல்லை. உடல் உபாதை ஏற்படும்போது நாம் செய்யும் பிரார்த்தனை இல்லை மதம். மதம் என்பது நித்தியத்தில் வாழ்வது. நித்திய அமைதியில் வாழ்வது. அந்தர்யாமியாக இருக்கும் அறியப்படாத ஆண்டவனின் இயல்பினை மனத்திற்கு எடுத்துக் காட்டி அவனை அடைவதற்கு வழியும் காட்டுவது மதம்.

நீங்கள் யாவரும் உண்மையான மத வாழ்க்கை வாழ்வீர்களாக! இறுதியில் நித்திய ஆனந்தம் பெறுவீர்களாக!

## 36. சத்திய மதம்

*[அகில உலக மத சம்மேளனத்தின் அருள் கூட்டத்திற்கு 1948 மார்ச் மாதம் சுவாமி சிவானந்தா அனுப்பிய அருளுரை]*

நீங்கள் அனைவரும் சத்திய மதத்தைச் சார்ந்திருப்பதால் பாக்யவான்கள்! உண்மை என்பது எந்த ஒரு மதத்திற்கும் சொந்தமானது இல்லை. உண்மை என்பது ஒருங்கிணைந்த ஒரே நித்தியமான குணம். சத்தியத்தின் வழியில் செல்பவர் ஒளி, அமைதி, ஞானம், ஆற்றல், ஆனந்தம் ஆகியவற்றின் வழியில் செல்கிறார். எல்லா மதங்களும் பூரணம் என்னும் நகரை நோக்கிச் செல்லும் எண்ணற்ற வழிகளே. எனவே ஒவ்வொரு மதமும் பிற மதங்களின்பால் பரிவும், சமநோக்கும் கொண்டிருக்க வேண்டும். மதங்களிடையே கருத்து வேறுபாடுகள் இருக்குமானால், அதற்குக் காரணம் உண்மையான லட்சியத்தில் சில முக்கியமற்ற கருத்துக்களை தவற விட்டுவிட்டு இருளிலே இருப்பதுதான்.

ஹிந்து மதம் பல கருத்துக்கள் இணைந்த ஒன்று ஆகும். அதன் ஆசார சீலர்கள் குறுகிய சம்பிரதாயங்களைக் கைவிடவேண்டும். பிற மதங்கள் எதிர்ப்பானவை என்று யாரும் கருதக் கூடாது. ஒவ்வொரு மதத்திலும் உண்மையின் வித்துக்கள் உள்ளன. அவ்வித்துக்கள் துளிர்விட மதிக்கப்பட வேண்டும். ஹிந்து மதத்திற்குப் பரந்த இதயமும், முற்றிலும் ஒளி பொருந்திய அடித்தளமும் உண்டு. வேதங்களும், உபநிடதங்களும் இப்பிரபஞ்ச முழுவதற்கும் சொந்தமான மதத்தையே தோற்றுவித்துள்ளன. சத்தியம், ஞானம், அனந்தம் அல்லது பிரம்மத்தின் நித்திய நிலையிலும், முடிவற்ற நிலையிலும் ஹிந்து நம்பிக்கை கொண்டிருக்கிறன். உலகத் தோற்றத்தில் ஹிந்துவிற்கு நம்பிக்கை கிடையாது.

டோயிசம் தத்துவரீதியான மதம். சமூக வாழ்க்கை அறிஞரின் வேலையில்லை என்று டோயிசத் தத்துவவாதி நினைக்கிறர். ஆன்மீக ஒருமைப்பாட்டில் அவர் நம்பிக்கை கொண்டிருக்கிறர். ''அறிந்தவர், பேசுவது இல்லை, பேசுபவர் அறிந்தவர் அல்லர்'' என்கிறர் லயோட்சு. ஆசையை அழித்து நிர்வாணம் அடைவது புத்த மதத்தின் குறிக்கோள். அனைத்து அறிவினூடேயும் செல்லும் அமைதியே கிறிஸ்துவ மதத்தின் இலட்சியம். எல்லா மதங்களின் கடவுளும் குறைபாடுகளும் அப்பார்ப்பட்டவர், அளப்பரிய ஞானம் உடையவர், நித்தியமானவர், நித்திய ஆனந்த ஸ்வரூபி! மதங்கள் என்ற வரையறைக்குள் வாராத பிரிவினரும் முடிவிலா வாழ்க்கை அறிவு ஆனந்தம் ஆகியவற்றையே குறிக்கோளாகக் கொண்டுள்ளனர். இவ்வாறாக, இவ்வுலக முழுவதும் ஆன்மீக இணைப்பாக உள்ளது. உலக மாந்தர் அனைவரும் ஒரே மதத்தைச் சார்ந்தவர்கள், அம்மதம் உண்மையை அறிவதே.

ஓ மானுடனே! உன் சொந்த மதத்தைப் பின்பற்று. ஆனால் அம்மதத்தின் அடிப்படை ஆன்மீக இலட்சியங்களைப் பற்றிநில்! உங்களுடைய அன்றாட வாழ்க்கை முறைக்கு ஒரு திட்டம் போடு. தெய்வீக வாழ்க்கையை நோக்கி, உங்களை இட்டுச் செல்லும் தயாரிப்பே இது. கடவுளைப் பற்றிய வாதம் செய்வதற்காக நீங்கள் இங்கு வாழவில்லை. ஆனால் பரந்த உணர்வுடன் நேரிய ஆன்மீக வாழ்க்கை நடத்துவதற்கே இங்கு வாழ்கிறீர்கள். உண்மையில் பற்றுடனும், கவனமான விசாரம், எல்லா உயிரினங்கள்பாலும் சகிப்புத் தன்மை கொண்டு உண்மையான மத வாழ்க்கை வாழ்வதற்கே இங்கு வாழ்கிறீர்கள். உண்மையை அறியும் உணர்வினைப் பெருக்க, இயல்பினைச் சிறப்பாக்கி ஆன்மாவை உணரவே நாம் இங்கு வாழ்கிறோம். உங்கள் வாழ்க்கை சில நாட்களுக்கே. இவ்வளவு ஆண்டுகளாய் நீங்கள் என்ன சாதித்திருக்கிறீர்கள்? மதத்தின் தேவை, பெருமை பற்றி பேசியிருக்கிறீர்கள். ஆனால் உண்மையில் நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்? பிறப்பு இறப்பு என்னும் சுழற்சி சாகரத்தினூடே பரிணாம வளர்ச்சி என்னும் கப்பலை நன்கு செலுத்துவதற்காகவே மதம் உள்ளது. வாதப் பிரதிவாதங்கள் செய்வதற்காக மதம் இல்லை. வாழ்ந்து காட்டுவதற்காகவும், செய்து காட்டுவதற்காகவுமே மதம் உள்ளது.

எல்லா மதங்களின் அடிப்படைக் கருத்து பர நலம். இதுவே தெய்வீக ஞானத்திற்கான ஆரம்பம். பொது நலனுக்காக தன்னலனைத் தியாகம் செய்வதற்கு உலக மாந்தர் தயாராக இல்லை. விரிந்த நலனுக்காக கீழ்நிலையில் உள்ள தன்னலம் தியாகம் செய்யப்பட வேண்டும். தன்னலத்தை மறுத்து, உயரிய நோக்கத்திற்காக தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர் முன்பாக கல்வியறிவு, அறிவுத்திறன்,

மதத் தத்துவ விளக்கத் திறமை ஆகியவை பூஜ்யத்திற்கு நிகர். பிறர் நலனுக்காகத் தியாகம் செய்வது முதல் நிலை. ஆன்மீக இணைப்புக்காகத் தியாகம் செய்வது உயரியநிலை. எல்லா மதங்களையும் சேர்ந்தவர்கள் இதனை நினைவில் கொள்ளவேண்டும். அப்போதுதான் எல்லா வேறுபாடுகளும் மறையும். எந்த மதத்தின் கடவுளாக இருப்பினும் அந்தக் கடவுளை அடைவதே மதத்தின் இலட்சியம். தன்னலத்தை அறுப்பதன்மூலமே இது சாத்தியம். மத அனுபவத்தின் இம்முக்கிய இலட்சியத்தை வலியுறுத்தாத மதம் உண்மையான மதம் இல்லை. எல்லா யோகங்களும் பூரண வாழ்வின் இந்த அடித் தளத்தையே கருத்தாகக் கொண்டுள்ளன.

''உனக்கு எது செய்யப்பட வேண்டும் என்று நினைக்கிறாயோ, அதனையே பிறருக்குச் செய்,'' என்பதே ஒவ்வொரு மதத்தின் பொன் விதியாகும். மதவாதிகள் பிரசாரம் செய்யும் அனுஷ்டான அனுபவங்களை அவர்கள் அனுஷ்டானம் செய்து வந்தாலே போதும். உலகம் சொர்க்கமாகிவிடும். உணர்வு புறக்கணிக்கப்பட்டு, உருவங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. ஆன்மா கடவுள் உண்மை என்னும் உயரிய நிலையை அறிந்து கொள்வதற்காக, எல்லா மதத் தலைவர்களும், மத வாழ்க்கை முறைகளையும், ஆன்மீக லட்சியம்பற்றிய சரியான அறிவினையும் மக்களுக்குப்புகட்டி இவ்வுலகில் ஒரே மதம் நிலைத்திடச் செய்யவேண்டும்.

இப்பூவுலகில் வாழும் அனைவரும் உண்மையான மதம் என்றால் என்ன என்று தெரிந்துகொள்வார்களாக. எல்லாரும் உன்னத இலட்சியமான ஆன்மீக விடுதலையைப் பற்றிச் சிந்திப்பார்களாக! ஆண்டவன் உங்கள் அனைவருக்கும் அருள் புரிவாராக!

## 37. அனைத்துலக மதங்களின் சம்மேளனம்

*[ரிஷிகேஷத்தில் 1949 டிசம்பர் 29 ஆம் நாள் நடைபெற்ற சம்மேளத்தின் ஒன்பதாம் கூட்டத்தில் ஸ்தாபகர்–தலைவரான ஸ்ரீ ஸ்வாமி சிவானந்தர் அருளிய துவக்கச் செய்தி].*

### I சம்மேளனம்

அகில உலக மத சம்மேளனத்தின் பணிக்கு ஒரே பாராளுமன்றமோ, ஒரே அரசாங்கமோ, ஒரே மதமோ, ஒரே மொழியோ, ஒரே குல்லாயோ, ஒரே மாதிரி உடையோ, ஒரே உணவோ, ஒரே வகையான அஞ்சலி முறையோ, ஒரே குவளையோ தேவையில்லை.

அதற்கு வேண்டியவர் ஒரே சீரான உற்சாகத்துடன், அணையாத உறுதியுடனும் கூடிய மனந்தளரா, உண்மையான, தூய்மையான, தவம், மெய்ஞானம் பொருந்திய தெய்வீக புருஷரே. இச்சம்மேளனப் பணிக்கு ஸ்டாலினோ, ரூஸ்வெல்ட்டோ வேண்டாம். இந்தத் தெய்வீக புருஷராலேயே எல்லா மதத் தலைவர்களையும் ஒன்றாக இணைத்து, அகில உலக மத சம்மேளனம் அமைக்க முடியும். ஒரு சங்கரர் அத்வைத தத்துவத்தை நிலை நிறுத்தினார். ஒரு காந்தி சுயராஜ்யத்தை நிலை நிறுத்தினார்.

### II சம்மேளனத்தின் இலக்ஷியம்

ஒரே மதமோ, ஒரே அரசாங்கமோ, ஒரே மொழியோ, ஒரே மாதிரியான நன்னெறி மார்க்கமோ, ஒரே மாதிரியான உடையோ, உணவோ, ஒரே மாதிரியான கல்வியோ, நடைமுறையோ ஏற்படுத்துவது இயலாத ஒன்று!

சிருஷ்டியின் நியதி வேறுபாடு. வேறுபாடே கவர்ச்சியும் அழகும் தருகிறது. அகில உலக மத சம்மேளனம் வேற்றுமையில் ஒற்றுமையைச் சுட்டிக் காட்டுகிறது. உபவாசம் நம்மைத் தூய்மைப் படுத்திக்கொள்ள உதவுகிறது. ஆனுல் முகமதியர் ரம்ஜானின்போதும், ஹிந்து ஏகாதசியின்போதும் உபவாசம் இருக்கிறார். கடவுள் ஆனந்த சொரூபி. பிரார்த்தனை, தியானம் நம்மை ஆண்டவனிடம் இட்டுச் செல்கின்றன. ஆனுல் அந்தந்த மதத்தைச் சார்ந்தவர் அவரவர் மத முறைப்படி பிரார்த்தனை செய்ய வேண்டும். அகில உலக மத சம்மேளனம் அடிப்படை நெறிகளை வகுத்துள்ளது. உண்மை, அன்பு, தூய்மையே அவை! உண்மையே பேசுவீர் களாக! பிறர் உணர்வைப் புண்படுத்தாதீர்கள்! இதயம் என்னும் மத நெறியை ஏற்று நடப்பீர் களாக!

## III சம்மேளன சமயத்திற்கான செய்தி

உலகின் எல்லா மதங்களின் அடிப்படையான உன்னத உண்மையான ஆண்டவனுக்கு நமஸ்காரம்!

உலகில் மின்னல் வேகத்தில் நிகழ்ச்சிகள் நடை பெற்று வருகின்றன. மெதுவாக நடைபோடுபவர் பந்தயத்தில் தோற்றுவிடுவார். பல்வேறு மதங்களைச் சார்ந்தவர்களும், ஆஸ்திகர்களும், தங்களிடையே உள்ள வேறுபாடுகளை மறந்து தாமதம் இல்லாமல் ஒன்றுபடுவது அவசியம். அப்போதுதான் லௌகீக விஷயங்களால் மதம் பாதிக்கப்படாமல் இருக்கும். உலகின் ஒவ்வொரு பகுதியிலும் நடைபெறும் நிகழ்ச்சிகள் கலியுகத்தின் அடையாளமாகத் திகழு கின்றன. தர்மத்தை ரக்ஷிக்க வேண்டியவர்களா லேயே தர்மம் சீர்குலைந்து வருவதைப் பார்க் கிறோம். ஆன்மீக நெறிகளைப் பலி கொடுத்து

லௌகீக லாபத்திற்காக உலகத் தலைவர்களிடம் கோழைகளாக மக்கள் பணிவதைப் பார்க்கிறோம். ஒவ்வொரு நாட்டின் புராதனக் கலாசாரம் பாது காக்கப்பட வேண்டும் என்றால், ஆண்டவனைப் புறக் கணித்து லௌகீகத்தில் ஊறிக்கிடக்கும் இன்றைய அவல நிலையை மாற்றியாக வேண்டும்.

பொய்மை வெற்றியடைந்து வருவதுபோலத் தோன்றினாலும், 'சத்தியமேவ ஜயதே ந அன்ரிதம்' (வாய்மையே வெல்லும், பொய்மை இல்லை) என்னும் உபநிஷத் வாக்கியம் பொய்யாக்கப்பட முடியாது. இதயத்துள்ளே மனிதனுக்கு ஆண் டவன்பாலுள்ள பக்தி, உள்ளுரையும் மனிதனுக்கு அந்தராத்மாவை அறிந்து கொள்ள இருக்கும் துடிப்பு எப்போதும் இருந்து கொண்டுதான் இருக்கும். ஆண்டவனை அறியும்வரை இந்தத் துடிப்பு நிற்காது. புலனின்பம் என்னும் குறிக் கோள் இல்லாத வாழ்க்கை மாந்தரை அலுப் படையச் செய்துவிடும். நேரம் வரும்போது வாழ்க்கையை வீணாக்கிவிட்டதை ஒவ்வொருவரும் உணருவர். ஆன்மீக பரிபாகம் கொண்டுள்ள ஞானி மட்டுமே இந்த இரங்கத்தக்க நிலையினின்று தப்பிக்க முடியும்.

மரணம், நோய், முதுமை, துன்பம் போன்ற காரணம் காண முடியாத சவால்கள் நொடிக்கு நொடி சவாலாக அமைகின்றன. இச் சிக்கலை விடு விக்க உள்ள ஒரே ஒரு தீர்வு ஆன்மீக ஞானமே! ஒவ்வொரு மதமும் ஆண்டவனை அறிய ஒரு வழியைக் காட்டுகிறது. எனவே மதம் மனிதனின் அத்தியாவசியத் தேவை! ஒரு சிலரின் குறுகிய நோக்கே மதத்தின் மகிமையையும், மாந்தரின் வாழ்க்கைக்கு மதத்தின் அவசியத்தையும் அறிந்து கொள்ள முடியாதவாறு தடுக்கிறது.

எல்லாம் ஆண்டவனின் திருவிளையாடல்! நலத்தைச் சிறப்பிக்கவே தீமை உள்ளது. மாந்தரின் உள்ளத்துள்ளே மதத்தின்பால் பற்றை வளர்க்கவே நாஸ்தீகம் உள்ளது. லௌகீக உணர்வு மறைய வேண்டும். மதமின்றி வாழ முடியாது என்பதை மாந்தர் உணர்வர்.

கடவுள் பக்தி என்னும் உணர்வினை தத்தம் மக்களிடையே பரப்புவது அனைத்து மதத் தலைவர்களின் கடமையாகும். தத்தம் மதங்களைச் சார்ந்தவர்களைத் தூய்மையாக்குவது மதத் தலைவர்களின் கடமை. புனிதமான மதம் எவ்வித எதிர்ப்பையும் முறியடித்து சேதமின்றி நிலைத்து நிற்கும் பலத்தைப் பெற்றுத்திகழும்.

இதுவே எல்லா ஆஸ்திகர்களின் உடனடிப் பணி. ஆஸ்திகர் அனைவரின் உள்ளங்களிலும் மதக் கொள்கைகளில் பற்றிப் பிடித்து நிற்கும் பலத்தையும் தைரியத்தையும் ஆண்டவன் அருள்வாராக. பாரெங்கும் அமைதி, வளம் நிலவுவதாக! அனைவர்க்கும் ஆண்டவன் புத்தி அருள்வாராக!

## 38. எல்லா மதக் குருமார்களின் பொதுவான செய்தி

[1953 ஏப்ரலில் முதன் முதலாக சிவானந்த நகரில் நடைபெற்ற உலக மத மகா சபைக்கு ஸ்ரீ சுவாமி சிவானந்த மஹராஜ் அருளிய செய்தி.]

அன்பு, சகோதரத்துவம், ஒற்றுமை ஆகியவை வேண்டும்! மனிதப் பிறவி என்பது கடவுள் நமக்களித்துள்ள வரப்பிரசாதம். பூரண நிலை அடைவதற்காகவே நமக்கு மனிதப் பிறவி வாய்த்துள்ளது. ஆன்மீக ஞானம் பெறுவதற்காக சீரிய

அனுபவம் பெறுவதற்கான வாய்ப்பே மனிதப் பிறவி. இக்குறிக்கோளை எய்தவே நாம் வாழ வேண்டும்.

மனித வாழ்வின் லட்சியத்தை அடைவதற்கான பல்வேறான வழிமுறைகளே பல்வேறான மதங்கள் — வாழ்க்கையின் இக்குறிக்கோளை நிறைவேற்றும் மார்க்கமே மதம். ஒவ்வொரு மத மகானும், அந்தந்தக் காலச் சூழ்நிலைக்கேற்ற வழிமுறைகளைக் கூறியுள்ளனர். அனைவரும் ஆன்மீகப் பூரணநிலை எய்துவதற்கான வழிமுறையையே அவர்கள் அளித்துள்ளனர். இதுவே அனைத்து மதங்களின் அடிப்படை. மேலாக வேறுபாடுகள் இருப்பினும் அடிப்படை ஒன்றே.

எல்லா மதங்களும் கொடுக்கும் ஒரே நெறி நல்ல தன்மை, கடவுள் தன்மை ஆகியவையே. நல்வாழ்க்கை நடத்துவதன் மூலம் உங்களை பரிசுத்தம் ஆனவராக ஆக்கிக் கொள்ளுங்கள். நற்குணத்தை அடிப்படையாகக் கொள்ளுங்கள். உங்கள் வாழ்க்கையின் அங்கங்களாக உண்மை, தூய்மை, அன்பு, பரநலம், நேர்மை ஆகியவற்றைக் கொள்ளுங்கள். இதன்மூலம்தான் நீங்கள் உங்கள் வாழ்க்கையின் லட்சியத்தை அடையமுடியும். வெறுப்பு, அகங்காரம், கோபம் ஆகியவற்றை விட்டுவிடுங்கள். அன்பு, அஹிம்சை, பணிவு ஆகியவற்றை மேற்கொள்ளுங்கள். போரையும், பதவி ஆசையையும் கைவிடுங்கள். அகண்ட அன்பு, பணிவு, இரக்கம் ஆகியவற்றை உங்கள் நெஞ்சில் நிறையுங்கள்.

அனைத்து நாடுகளின் தலைவர்களே! இயேசு நாதர், புத்தர், நபிகள், சொராஷ்டர், கிருஷ்ண பரமாத்மா, கன்பியூஷியஸ், மஹாவீரர்

ஆகியோரின் போதனைகளைப் பரப்பிடுங்கள். வேறுபாடுகளைக் களையுங்கள். அணு ஆயுதத் தயாரிப்பைக் கைவிடுங்கள். எல்லா நாட்டு மக்கள் இனங்களையும் அன்பு அரவணைக்கட்டும். உங்கள் வாழ்க்கையின் இயக்கமாக மதம் இருக்கட்டும். தூய்மை, அன்பு, அமைதி, பணிவு ஆகியவை உங்கள் எண்ணங்களிலும் செயல்களிலும் பரிமளிக் கட்டும். உலகின் எல்லா மதங்களின் சாரம் இதுவே. இதுவே அமைதி, வளம், மகிழ்ச்சி ஆகியவற்றுக் கான மார்க்கம்.

சர்வ மதம் என்பது பர நலம், சுய மறுப்பு, சேவை, அன்பு, சகோதரத்துவம் ஆகியவற்றைக் குறிக்கிறது. நடைமுறை நன்மை என்னும் கருத்தை அது பரப்புகிறது. பூமியில் கடவுள்நிலை என்பதை அது குறிக்கிறது. உண்மை, தூய்மை, சேவை, பக்தி, தியானம், ஆன்மீக பரிபாகம் ஆகிய வாழ்க் கைக்கு உங்களை அர்ப்பணித்துக்கொள்ள சர்வ மதம் கூறுகிறது. அனைவரையும் ஒன்றுபடுத்தி அனைவருள்ளும் இருக்கும் ஒரே இறைவனைக் கண்டு, அனைவருக்கும் சேவை செய்வீர்களாக. ஒற்றுமை என்னும் நெறியைப் பரப்பிடுங்கள். பூமியில் நலம் சேரும்! இதயபூர்வமான உண்மை மதம் மனித இனத்தைத் தழுவட்டும். உலக மாந்தரிடையே அமைதி, சமாதானம், பூரணத்துவம் ஏற்படும்.

---

## உலக அமைதிக்கான பிரார்த்தனை

போற்றத்தக்க இறைவா! உலக முழுவதும் பூரண அமைதி நிலவட்டும். போர்கள் விரைவில் முடிவுக்கு வரட்டும். எல்லா நாட்டு மக்களும், மக்கட் சமுதாயங்களும் அன்பெனும் தளையால் கட்டுண்டு ஒன்றுபடட்டும். அனைவரும் அமைதி யையும் வளமான வாழ்வையும் பெறுவார்களாக.

பிரபஞ்சம் முழுவதும் ஆழ்ந்த, நிரந்தர அமைதி நிலவட்டும். மிகவும் மேலான அமைதியை எமக்கு அருள்வாயாக. உலகத்தவரின் நல்வாழ்வுக்காக நாம் தன்னலங்கருதாத தியாக உள்ளத்துடன் ஒருங்கிணைந்து பாடுபடுவோமாக. பரந்த அன்பையும் உலக சகோதரத்துவத்தையும் வளர்த்துக் கொள்வோமாக. அனைத்து உயிர்களின் முகத்திலும் இறைவனைக் காண்போமாக.

கருணையே உருவான இறைவா! அனைவரையும் புரிந்துகொள்ளும் ஆற்றலையும் எவரையும் மன்னிக்கும் பண்பையும், சகிப்புத் தன்மையும், சூழ்நிலையோடு இணைந்து நடந்துகொள்ளும் இயல்பையும் எங்களுக்கு அருள்வாயாக. இறைவா! எங்கெங்கும் ஒன்றுபட்ட ஒரே ஆன்மாவையே காணக்கூடிய தெளிவாகிய ஞானக் கண்ணை எங்களுக்கருள்வாயாக.

கிழக்கிலும் மேற்கிலும் அமைதி நிலவட்டும்
வடக்கிலும் தெற்கிலும் அமைதி நிலவட்டும்
மேலும் கீழும் அமைதி நிலவட்டும்

உலகிலுள்ள அனைத்து உயிர்களுக்கும் அமைதி ஏற்படட்டும்.

அனைவருக்கும் மங்களம் உண்டாகட்டும்
அனைவருக்கும் அமைதி உண்டாகட்டும்
அனைவருக்கும் நிறைவு உண்டாகட்டும்
அனைவருக்கும் நல்வாழ்வு உண்டாகட்டும்

உலக முழுவதுக்கும் இன்பம் ஏற்படட்டும்.

ஓம்! அதுவும் பூரணம். இதுவும் பூரணம். அந்தப் பூரணத்திலிருந்து இந்தப் பூரணம் தோன்றி இருக்கிறது. அந்தப் பூரணத்திலிருந்து இந்தப் பூரணத்தை எடுத்துவிட்டபோதும், அது எப்பொழுதும் பூரணமாகவே இருக்கின்றது.

ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!

